

தியாகராயநகர் ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப் பள்ளி. சென்னை பாரதி இளைஞர் சங்கம் பாரதியார் நூற்றாண்டு நெருங்கும் சமயத்தில் ஒரு வேடப் போட்டி நடத்திப் பார்த்து மகிழ்ந்தது. ''எத்தனை பாரதியடி!'' என்று அனைவரும் வியந்து மூக்கில் விரல் வைக்கும் படியாகச் சென்னையிலுள்ள நாற்பது நர்ஸரிப் பள்ளிகளைச் சேர்ந்த சிறுவர் சிறுமியர் பாரதி வேடமணிந்து பங்கு கொண்டனர்! பெற்றோருக்கு எத்தனை ஆர்வம்! பாரதி வேடமணிந்து மகிழ்வித்த அத்தனை சிறுவர் சிறுமியர்களுக்கும் பாரதி இளைஞர் சங்கம் நற்சான்றிதழ் வழங்கிப் பாராட்டியது! படத்தில் பாரதி வேடமணிந்த குழந்தைகளுக்குப் பின்னால் பாரதி இளைஞர் சங்கம் தலைவர் கே. ராமமூர்த்தி.

# பாரதிப் பூக்கள்!

பாரதி என்றொரு சக்தி — அது
பாட்டுருக் கொண்டு பரவியதாலே
பாரினில் எத்தனை பக்தி — அதில்
பல்கிப் பெருகிடும் பூக்களைப் பாரீர்!

— அழகன்



Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள் !** **மணமானவர்கள் !!**

**வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,**
**தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,**
**இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'**
**ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'**

# 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

- **குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்**
- **கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்**

சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

மாதாந்திர சுற்றுப் பயண விவரம்:. ஒவ்வொரு ஆங்கில தேதிகளிலும்

**பிரதம வைத்தியர் தங்குமிடங்கள்**

சென்னை-600 001. 3-ந் தேதி ஹோட்டல் ரோலக்ஸ், போன்: 24238. 90, NSC போஸ் ரோடு, பூக்கடை எதிரில். காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

சென்னை-600 002. 4 முதல் 8 ந் தேதி வரை. ராமச்சந்திரா லாட்ஜ். போன்: 846526 6, அத்திப்பட்டன் தெரு, அண்ணாசாலை சமீபம். காலை 7 முதல் இரவு 7 மணி வரை.

சென்னை-600 004. 1ந் தேதி முதல் 2ந் தேதி வரை நியூ உட்லண்ட்ஸ். போன்: 83111. எட்வர்ட் எலியட்ஸ் ரோடு, மயிலாப்பூர். காலை 8 முதல் பகல் 1 மணிவரை. மாலை 3 முதல் இரவு 7 மணி வரை.

சேலம் தலைமை அலுவலகம்: 11, 16, 17, 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள்.

திருச்சி: 9, 10 தேதி. 'அசோக்' பவன், ஜங்ஷன் ரோடு, போன்: 25783. காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கோவை: 12, 13ந் தேதி. ஸ்ரீ லக்ஷ்மி லாட்ஜ், ராஜ வீதி, போன்: 33330.

பொள்ளாச்சி: 14ந் தேதி. மாடர்ன் லாட்ஜ், தாலுகா ஆபீஸ் எதிர் சந்து. காலை 8 மணி முதல் 12 மணி வரை.

திருப்பூர்: 14ந் தேதி. ராமகிருஷ்ணா லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. மாலை 3 மணி முதல் 5 மணி வரை.

ஈரோடு: 15ந் தேதி. ஆனந்த் லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

மதுரை: 21, 22, 25, 26 தேதி: மணீஸ் கேப் (டவுன் ஹால் ரோடு) போன்: 22019. காலை 7 மணி முதல் இரவு 7 மணி வரை.

தூத்துக்குடி: 23ந் தேதி: ராதா லாட்ஜ், ஜி.சி. ரோடு, காலை 9 முதல் பகல் 12 மணி வரை.

திருநெல்வேலி: 23, 24, தேதி. நெல்லை லாட்ஜ் காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரை.

**உதவி வைத்தியர் தங்குமிடங்கள்:**

விழுப்புரம்: 3ந் தேதி. வாசவி விஹார் ஹோட்டல், எம். ஜி. ரோடு, காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கடலூர் என்.டி. 3ந் தேதி. ஹோட்டல் பிருந்தாவன், மாலை 3 முதல் இரவு 8 மணி வரை.

சிதம்பரம்: 4ந் தேதி. ஜெயராம் லாட்ஜ், (மேல வீதி) காலை 7 முதல் பகல் 3 மணி வரை.

கும்பகோணம்: 5ந் தேதி. தாஜ்மஹால் லாட்ஜ் பொற்றாமரைக் குளம் (போன்: 1423) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

தஞ்சாவூர்: 6ந் தேதி. அசோகா லாட்ஜ், (ராஜா கலை அரங்கம்) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

தேனி: 21ந் தேதி. பாண்டியன் லாட்ஜ். காலை 8 மணி முதல் பகல் 1 மணி வரை.

பெரியகுளம்: 21ந் தேதி. உடுப்பி ஸ்ரீ லக்ஷ்மி விலாஸ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

திண்டுக்கல்: 22ந் தேதி. ஆரிய பவான் லாட்ஜ் பழனி ரோடு. காலை 8 மணி முதல் மாலை 6 மணி வரை.

விருதுநகர்: 23ந் தேதி. ஹோட்டல் ஆர்ச் நேயா. காலை 7 மணி முதல் 12 மணி வரை.

இராஜபாளையம்: 23ந் தேதி. அசோகா லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

நாகர்கோவில்: 24ந் தேதி. உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பவன், போஸ்டாபீஸ் ஜங்ஷன் ரோடு, காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

தென்காசி: 25ந் தேதி. பார்வதி லாட்ஜ் காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

**தலைமை அலுவலகம்:**

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

**C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்**
(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)
**காந்தி ஸ்டேடியம் - சேலம்-636007**




வளரும் நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தைப் பெரிதும் பாதித்துக் கொண்டிருப்பது எரிபொருள் பிரச்னை. எரிபொருளை எப்படிச் சிக்கனமாகப் பயன்படுத்துவது என்பது பற்றிப் பல நாடுகளும் சிந்தித்து வருகின்றன. நமது மத்திய அரசும் எரிபொருளைச் சிக்கனம் செய்வதற்காக வாரம் ஐந்து நாள் வேலை முறையை அமுல்படுத்தலாமா என்று ஆலோசித்து வருகிறது.

மற்ற நாடுகளில் உள்ள அரசியல் கட்சிகளின் தரம், தொழிற் சங்கங்களின் நேர்மை, தொழிலாளர்களின் கடமை உணர்ச்சி, அரசின் திட்டங்களுக்கு அவை கொடுத்து வரும் மனப் பூர்வமான ஆதரவு — இந்த அம்சங்கள் எல்லாம் நம் நாட்டில் நிலவுகின்றனவா? ஐந்து நாள் வாரம் முறையை அமுல்படுத்தினால் அரசு எதிர்பார்க்கும் பலன் கிட்டுமா?

ஆறு நாள் வாரத்திலேயே எரிபொருளைச் சிக்கனம் செய்து அரசு எதிர்பார்க்கும் சில கோடி ரூபாய்களை மீதமாக்க முடியும்.

ஒரு சின்ன உதாரணம்:

25 வருடங்களுக்கு முன்பே மதுரையில் டி. வி. எஸ். நிறுவனம் எரிபொருள் சிக்கனத்தின் மகிமையை அறிந்து வைத்திருந்தது. டிரைவர்களுக்கு ஓர் ஆணை பிறப்பித்திருந்தது. பஸ் ஒரு நிமிட நேரத்துக்கு மேல் நிற்க நேர்ந்தால் டிரைவர் இஞ்சினை நிறுத்தி விட வேண்டும். பஸ் புறப்படும்பொழுது தான் மறுபடி இஞ்சினை 'ஸ்டார்ட்' செய்ய வேண்டும். இதனால் எவ்வளவு டீசல் மிச்சம்!

இந்தியாவில் உள்ள பொதுத் துறைக்குச் சொந்தமான எல்லா மோட்டார் வாகனங்களிலும் மதுரை டி. வி. எஸ். ஸ்தாபனம் கடைப்பிடித்த எரிபொருள் சிக்கன முறையைக் கையாண்டால் என்ன?

இந்தியா சுதந்திரம் அடைந்த சில ஆண்டுகளில் காணப்பட்ட நாட்டுப் பற்றும் கடமை உணர்ச்சியும் இன்று நம்மிடம் இல்லை. சமீபத்தில் பால்கிவாலா, ''நாம் ஐம்பதுகளில் 100 சதவீத கனவான்களாக இருந்தோம்; அறுபதுகளில் 50 சதவீதமாகக்குறைந்தோம். எழுபதுகளில் 25 சதவீதமாக மேலும் குறைந்தோம். எண்பதுகளில் ஒரு சதவீதமாவது கனவான்களாக இருப்போமா?'' என்று வேதனையுடன் எழுதியிருந்தார். பல ஆண்டுகளுக்கு முன் முன்னாள் அமெரிக்கத் தூதர், பொருளாதார மேதை கால்பிரய்த் நம்மைப் பற்றிக் குறிப்பிடும்போது ''இந்தியாவில் எல்லாச் செல்வங்களும் இருக்கின்றன. இந்தியா சிறந்த — வளமான நாடாக முடியும். ஆனால் இந்திய மக்கள் உழைக்கத் தயங்குகிறார்கள்'' என்று கூறினார். அன்று அவர் சொன்னது இப்பொழுதும் பொருந்தும்.

இந்த நிலைமையில் மத்திய அரசு ஐந்து நாள் வேலை முறையை அமல் செய்தால் பல்வேறு அரசு ஊழியர்களும் மனப்பூர்வமாக ஒத்துழைப்பார்களா என்பது சந்தேகமே! சனிக்கிழமை அரசு ஊழியர்கள் செய்ய வேண்டிய எட்டு மணி நேர வேலையை மற்ற ஐந்து நாட்களில் பகிர்ந்துகொண்டு ஒவ்வொரு நாளும் சற்றுக் கூடுதலான நேரத்துக்கு ஊழியர்கள் வேலை செய்ய வேண்டும். தொடக்கத்தில் ஊழியர்கள் எதிர்பார்த்தபடி வேலை செய்யலாம். நாட்கள் செல்லச் செல்ல ஊழியர்களின் உற்சாகம் குறைந்து போகும். இறுதியில் பழைய ஆறு நாள் அளவு வாரத்தில் ஊழியர்கள் தினந்தோறும் எந்த வேலை செய்தார்களோ அதே அளவுக்குத் தான் வேலை பிரதிதினமும் முன்னேறும்.

ஏற்கனவே நம் நாட்டில் நிர்வாகிகளுக்கும் ஊழியர்களுக்கும் சுமுகமான உறவு இருந்து வந்ததில்லை. இந்த நிலையில் ஐந்து நாள் வாரம் வளர்ச்சிக்கு இடையூறு செய்யுமே யன்றி உதவாது.

பிரிட்டிஷ் ஆட்சியாளர் விட்டுச் சென்ற பல சட்டங்களையும் நடைமுறைகளையும் நாம் இன்னும் பின்பற்றி வருகிறோம். அவற்றில் ஓர் அசட்டுப் பழக்கம் ''ஞாயிறு விடுமுறை''. அவர்கள் தங்கள் வழிபாடு, கலாசாரத்தைப் பின்பற்றி அவர்களுக்கு வசதியாக வார விடுமுறை நாளாக ஞாயிற்றுக் கிழமையை அறிவித்தார்கள். ஞாயிறு விடுமுறை என்றாலே சினிமா செல்லுதல், வேறு வழியில் வீணாகப் பொழுதைக் கழித்தல் என்ற உணர்வே நமக்கு ஏற்படுகிறது. வெள்ளிக் கிழமை இந்துக்களுக்கும் இஸ்லாமியப் பெருங்குடி மக்களுக்கும் தெய்வத்தை வழிபடும் நாள். எனவே வார விடுமுறையை வெள்ளிக் கிழமையாக மத்திய, மாநில அரசுகள் அறிவிக்க வேண்டும். நாட்டின் நலன் கருதிக் கிறித்துவப் பெருங்குடி மக்கள் இந்த மாற்றத்தை எதிர்க்க மாட்டார்கள்.

வெள்ளிக் கிழமை விடுமுறை என்றால், கோயிலுக்குச் செல்லும் நாள் என்ற உணர்வு மக்களுக்கும் அரசு ஊழியர்களுக்கும் ஏற்படும். தெய்வ பக்தியோடு நாட்டுப் பற்றும் கடமை உணர்வும் இயல்பாக ஏற்பட வாய்ப்பு உண்டு.

—கே. வி. பரமானந்தம்

# Kalki Shopping Page



# அண்ணன் வீட்டு கல்யாணம்!

கல்கி வெள்ளி விழாவில் பங்கேற்றுப் பேசிய திரு வாசன், அதனைத் "தம்பி வீட்டுக் கல்யாணம்" என்று பொருத்தமாக வர்ணித்தார். அவ்வாறே தமது ஆனந்த விகடன் பத்திரிகையில் எழுதவும் செய்தார்.

இன்று ஆனந்த விகடனுக்குப் பொன் விழா.

அண்ணன் வீட்டுக் கல்யாணம்!

நாலு நாள் கல்யாணமாக நலம்பட நடக்கப் போகிறது. எதையும் சிறிதாகச் செய்யத் தெரியாத பெரிய மனம் படைத்தவர் வாசன். அதே குண நலனைக் குறைவறப் பெற்றுள்ள அவர் குமாரரும் இன்றைய விகடன் ஆசிரியருமான திரு பாலசுப்பிரமணியம் பொன் விழாவைப் பெரிய அளவிலே நடத்துகிறார். மியூஸிக் அகாடமி, வள்ளுவர் கோட்டம், பல்கலைக் கழக நூற்றாண்டு மண்டபம் ஆகிய இடங்களில் பல்வேறு விழாக்களும், ராஜாஜி மண்டபத்தில் ஒரு கண்காட்சியும் ஏற்பாடாகியுள்ளன.

இது விகடன் விழாதான்; தமிழர் விழாவும் கூட.

விகடன் வேறு தமிழன் வேறு என்று எண்ணிப் பார்க்க முடியாத அளவில் ஒன்றிவிட்டிருக்கின்றனர் அல்லவா? அவரவர் தத்தமது இல்லத்தில் குடும்பத் தலைவனது ஐம்பதாவது பிறந்த நாளை எப்படிக் கொண்டாடி மகிழ்வோமோ அப்படிச் சந்தோஷப் படுகிறோம்.

கல்கி காரியாலயத்தில் உள்ள நாங்கள் மற்ற அனைவரையும் விட அதிகமாக மகிழ்ச்சி அடைய விசேஷ காரணம் உண்டு. இப்பத்திரிகையின் ஸ்தாபக ஆசிரியர் அமரர் கல்கி விகடனில் ஆசிரியராக இருந்து நீண்ட காலம் பணியாற்றியவர். விகடனுக்கு ஒரு தனித் தன்மையையும் அந்தஸ்தையும் அளித்ததுடன் அது பரபரப்பாக விற்பனையாகவும் வழி வகுத்தவர். கல்கிக்கு வாசன் வலது கரமா அல்லது வாசனுக்கு கல்கி வலது கரமா என்றால் தொன்னை – நெய் பழமொழிதான் நினைவுக்கு வரும்.

தியாகபூமி வெளியான காலத்தில் விகடன் என்ற குரல் வீதியில் கேட்டால் அத்தெரு முழுவதும் உள்ள வீடுகளில் முன் வாசல் கதவுகள் படபடவென்று திறந்துகொள்ளும்.

கள்வனின் காதலி வெளிவந்தபோது ஸ்டேஷனில் ஒரு ஏஜண்ட் பார்சலைப் பிரிக்கு முன்னரே இடி நிற்பார்கள் விகடன் வாசகர்கள்.

வாசன், கல்கி தவிர அன்று ஒரு டீம் இயங்கியது. விளையாட்டின் வெற்றிக்கு 'டீம் ஒர்க்' எப்படி இன்றியமையாததோ அப்படி இந்த 'டீம்' பத்திரிகையின் வெற்றிக்கு ஒருவரை யொருவர் புரிந்துகொண்டு உழைத்தது. மாலி, துமிலன், மார்கன், சேகர், பரதன், ரா. அ. பத்மநாபன், சதாசிவம் இப்படிப்பலர் அந்த 'டீமில்' இருந்தார்கள்.

வாசனும் கல்கியும் கருத்து மாறுபட்டார்கள், – பல சந்தர்ப்பங்களில். இல்லாவிட்டால் கல்கி பத்திரிகையே தோன்றி இராது! ஆயினும் அவர்களிடையே நிலவிய ஆழ்ந்த நட்பு, அந்நியோன்யமான சகோதர பாவம் என்றுமே மாறியதில்லை.

வாசன் தமது காபிரைட் உரிமைகளை விட்டுத் தரவில்லையே என்ற தாபம் கல்கிக்கு ஓர் எழுத்தாளன் என்ற முறையில் இருந்து வந்தது. வாசன், சட்டப்படி தமக்குரிய உரிமைகளைத் தக்க காரணமின்றி விட்டுத் தர விரும்பாதவர். அதிலும் ஒரு நியாயம் இருக்கவே செய்தது. காபிரைட் சட்டமே மாறக் கல்கி போராடினார். ஆனால் சட்டம்





✖ எஸ். பாலசுப்ரமணியன்

✖ திரு வாசன்

மாறிய சமயம் கல்கி அமரராகிவிட்டிருந்தார். வாசன் எனக்குத் தாமாகவே ஃபோன் செய்தார். காப்பி ரைட் சட்டத்தில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை இன்னருணை எனக்கு அவர் விளக்கினார். அதுவரை இந்த விவரம் எனக்குத் தெரிந்திருக்கவில்லை. ''அப்பாவின் புத்தகங்கள் எதை வேணுமானாலும் இனி நீ பிரசுரிக்கலாம். முழு உரிமையும் உன்னுடையது தான். இதை உறுதிப்படுத்தி ஒரு கடிதமும் எழுதியிருக்கிறேன். நாளைத் தபாலில் உனக்குக் கிடைக்கும்'' என்றார். சட்டம் மாறியதை நான்தான் அறிந்து கொண்டு செயலாற்ற வேண்டுமேயன்றி அவர் எனக்குத் தெரியப்படுத்த அவசியம் என்ன? சரி, கடிதம்தான் போட்டாயிற்றே. ஃபோன் பண்ண அவசியம் என்ன? வாசனுடைய பெருந்தன்மை எனக்குப் புரிய வந்த பல சந்தர்ப்பங்களுள் அது ஒன்று.

மக்களுக்குக் களிப்பூட்டுவதே சினிமாவின் முக்கிய நோக்கம் என்று கருதினார் வாசன். பத்திரிகை விஷயத்திலும் அவர் எண்ணம் இதுதான். (எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே!) களிப்பூட்டுவது எவ்வளவு முக்கியமோ அந்த அளவுக்குப் பயனுள்ளதாயும் அமைய வேண்டும் என்பது கல்கியின் கருத்து.

மங்கம்மா சபதம், சம்சாரம் போன்ற படங்கள் கல்கியின் தாக்குதலுக்கு உள்ளாயின. சந்திரலேகாவின் வெற்றியைக் கொண்டாட வாசனை அட்டைப் படத்தில் பிரசுரித்து மகிழ்ந்தார் கல்கி. ஆனால் பாராட்டியதென்னவோ அரை மனத்துடன்தான்! ஒளவையார் திரையிடப்பட்டது. அது வாசனையும் அவருடன் படத் தயாரிப்பில் ஒத்துழைத்த கொத்தமங்கலம் சுப்பு, கே.பி.எஸ் போன்றோரையும் மனமார வாயார வாழ்த்த ஒரு நல் வாய்ப்பாக அமைந்தது கல்கிக்கு. கல்கியில் பக்கம் பக்கமாக எழுதினார். தாமே முன்னின்று ஒரு பாராட்டுக் கூட்டத்துக்கும் ஏற்பாடு செய்தார்.

எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. ஒளவையார் ரிலீஸ் ஆனபோது வாசன் தாமே ஃபோன் செய்தார். ''இந்தப் படத்தை நீங்கள் பார்க்க வேண்டும்; நீங்களே விமரிசிக்கவும் வேண்டும்'' என்றார். ''சரி'' என்றார் கல்கி. வெலிங்டன் தியேட்டர். வாசன் கல்கியை எதிர்கொண்டு அழைத்துச் சென்றார் மாடிக்கு. மாடி ஏறும் போது வாசன் சொன்னார்: ''இத்தனை காலம் சினிமா ரசிகர்களுக்காகப் படம் எடுத்தேன். இன்று தமிழ் நாட்டுக்காக ஒரு படம் எடுத்திருக்கிறேன்!''

இருவரும் வராந்தாவில் நின்றார்கள். கீழே நோக்கினார்கள். மக்கள் வெள்ளம்! '' 'ஷோ' ஆரம்பிப்பதற்கு முன்பாகவே வரச் சொன்னேனே, எதற்கு? தெரிகிறதா? இந்தக் கூட்டத்தை நீங்கள் பார்த்தால் சந்தோஷப்படுவீர்கள் என்பதற்காகத்தான்'' என்றார் வாசன். நெடுந் தூரத்துக்கு நெடுந் தூரம் 'கியூ' வரிசைகள்! ''பெண்மணிகளைப் பாருங்கள்! எத்தனை பேர் டிக்கெட் வாங்க எவ்வளவு ஆர்வமாக நிற்கிறார்கள்!'' என்றார் வாசன்.

'களிப்பூட்டும் படங்களுக்கு மட்டுமல்ல; களிப்பூட்டும்போதே நற்பயனையும் தரும் சிறந்த படங்களுக்கும் ஏராளமான கூட்டம் வரும்; மக்களின் ரசனையைக் குறைத்து மதிப்பிடக்கூடாது' என்ற கல்கியின் கருத்தை அந்தக் கூட்டம் நிரூபித்துக் கொண்டிருந்தது! இருவர் முகத்திலுமே நியாயமான பெருமிதத்துடன் கூடிய ஆனந்தம்! 'என்னுடைய கருத்துக்கு வெற்றி' என்பது போல் கல்கி பார்த்தார். 'உங்கள் எண்ணத்தைச் செயலாக்கிக் காட்டியவன் நான்!' என்பதுபோல் வாசன் நோக்கினார்! இருவர் மனங்களிலும் நிறைவு.

இப்படி ஒன்றா இரண்டா? எத்தனையோ அரிய நினைவுகள்.

''கல்கி பத்திரிகையின் பிரிண்டிங் பிரமாதம். அதன் வெற்றிக்கு அதுவும் ஒரு காரணம்; நான் உங்கள் பிரஸ்ஸை வந்து

⌘ ஒளவையார் தயாரித்த வாசனுக்குப் பாராட்டு விழா - கல்கி பேசுகிறார். வாசன், டி. பி, ராஜாஜி. திருப்புகழ் மணி



பார்க்க வேண்டும்'' என்று சதாசிவத்திடம் கூறி, தம்மைத் தாமே கல்கி காரியாலயத்துக்கு உரிமையோடு அழைத்துக்கொண்டு விஜயம் செய்த வாசன்;

திரும்பிச் சென்று பலப்பல ஹைடல்பர்க் அச்சு இயந்திரங்களுக்கு ஆர்டர் கொடுத்து விகடன் அச்சகத்தில் நிறுவிச் சாதனை புரிந்த வாசன்;

என்னுடைய முதல் விமர்சனத்தைப் பிரசுரத்துக்கு (மோகினித் தீவு நாடகத்தின் விமர்சனம்) ஏற்றுத் தமது பாராட்டை தேவன் மூலம் தெரிவித்த வாசன்;

என் முதல் கதைக்கு விகடன் போட்டியிலே மூன்றாவது பரிசு தந்து முதுகிலே தட்டியும் கொடுத்த வாசன்;

விகடன் அச்சகத்திலே ஃபோர்மென், மேனேஜர் முன் ஃபோர்மேன் நாற்காலியில் அமர்ந்து, ''இந்தப் பக்கத்தை அங்கே கொண்டுபோ, அதைஎடுத்து இங்கேபோடு'' என்று கூறிய வாசன்;

சினிமாவில் மட்டும் பிரும்மாண்ட தயாரிப்பு அல்ல;பத்திரிகையில் எழுத்தாளருக்குத் தரப்படும் பரிசுத் தொகையும் பெரிசு, ரொம்பப் பெரிசு என்று வியக்க வைத்த வாசன்;

பெரிய அளவில் செல்வம் ஈட்டி, பெரிய அளவில் செலவழித்து, பெரிய அளவில் நன்கொடைகளும் வழங்கிய வாசன்;

கடைசியில் உடம்பு சரியில்லாத போதிலும் வேதனையை மறைத்துக் கொண்டு என் மகளின் அப்த பூர்த்திக்கு வந்து ஆசி நல்கி ஒரே ஒரு ஸ்பூன் பாயசம் மட்டும் சாப்பிட்டுவிட்டுத் திரும்பிய வாசன்;

என்று பலவிதமாகவும் வாசன் இன்று என் மனத் திரையில் தோன்றிக் கண்களைப் பனிக்கச் செய்து கொண்டிருக்கிறார்.

எத்தனை எழுத்தாளர்கள், எத்தனை ஓவியர்களை உருவாக்கினான் விகடன்!

---

எனது நண்பர் ஒருவர் டூரிங் டாக்கீஸ் வைத்திருக்கிறார். ஒரு நாள் இரவு சினிமா முடிந்து வரும் அவரைச் சந்திக்க நேர்ந்தபோது, கையில் சில தேங்காய்களைக் கொண்டு வந்திருந்தார்.

என்ன விஷயம் என்று வினவியபோது, சொன்னார்:

''சினிமா பார்க்க வருபவர் இரண்டு தேங்காய்களைக் கொடுத்துவிட்டு, டிக்கட் வாங்கிச் செல்வர். இரண்டு தேங்காய்கள் இரண்டு ரூபாய் ஆகிறது. டிக்கட் 85 பைசா தானே. அவர்களுக்குக் காய் தோட்டத்திலிருந்து கிடைக்கிறது. காசு தராமல் சினிமா பார்த்த திருப்தி ஏற்படுகிறது. நல்ல சீசனில் இருபது தேங்காய்கள் வரை கிடைக்கும். எல்லாம் அட்ஜெஸ்ட்மெண்ட் தானே!''

-இராம. குமாரசாமி



தேவன், சில்பி, கோபுலு, ராஜு, ஸ்ரீதர், லக்ஷ்மி, கோபு, கதிர், நாடோடி, சசி, மணியன், பிஸ்ரீ, சேவற்கொடியோன் — யாரைச் சொல்வது யாரை விடுவது?

கல்கி; வாசன் — இரண்டு மாமனிதர்கள். அவர்களுடன் தொடர்பு கொண்டிருந்த ராஜாஜி, டி.கே.சி. போன்ற வேறு பல மாமனிதர்கள். நாட்டை நடத்திச் சென்ற சின்னத் தனங்களை அறியாத மாபெரும் தலைவர்கள் — அது ஒரு பொற் காலம். பொற்காலம் கண்ட விகடனுக்குப் பொன் விழா.

இன்னும் ஒரு பொற் காலம் உருவாக வேண்டும். இனி உருவாகும் அந்தப் பொற்காலம் விகடனின் நூற்றாண்டு விழாவின் போது கொண்டாடப்பட வேண்டும். பொற்காலத்தை உருவாக்கும் தகுதி பெற்றவர்கள் ரொம்பப் பேர் தோன்றவேண்டும்.

அத்தகைய தகுதி உள்ளவர்களில் ஒருவர் தான் இன்றைய ஆனந்த விகடன் ஆசிரியர் பாலசுப்பிரமணியம். விகடனின் விற்பனை எண்ணிக்கையை முன்னெப்போதும் கண்டிராத அளவில் ஏறத் தாழ மூன்று லட்சம் பிரதிகளுக்கு உயர்த்திச் சாதனை புரிந்திருக்கிறார். அதனை விகடனின் பண்பு மாறாது செய்திருக்கிறார் என்பதே பெருமை.

பொன் விழாவை யொட்டி விகடன் நடத்தும் நாவல் போட்டிகளில் சமூக நாவல்களுக்கான நடுவர் குழுவில் ஒருவனாகப் பங்கேற்கும் கௌரவம் எனக்குக் கிடைத்தது. ஒரு பக்கம் லக்ஷ்மி, மறுபுறம் சிவபாத சுந்தரம், எதிரே பாலசுப்பிரமணியம். பரிசுக்குரிய நாவலை நாங்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுத்து விட்டோம். அதிலே வியப்பில்லை. பரிசுக்குரிய அது மற்ற அனைத்தையும் விட பல படிகள் உயர்வாயிருந்தது.

வியப்பளித்த விஷயம் என்னவெனில் இறுதிப் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டிருந்த நாவல்களைப் பாலசுப்பிரமணியம் அலசிய விதம்தான். ஒவ்வொரு நாவலின் கதை, பாத்திரப் படைப்பு, சம்பவக் கோவை, நடை, மற்ற மற்ற நிறை குறைகளை அவர் விண்டு விண்டு வைத்துக் கொண்டிருந்தார்! எவ்வளவு ஆர்வமாகவும் கவனமாகவும் படித்திருக்கிறார் என்று எண்ணி நான் பிரமித்துப் போனேன் என்றால், எத்தனையோ நாவல்களை எழுதிக் குவித்துள்ள லக்ஷ்மியும், தமிழ் நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும் என்ற நூல் எழுத நூற்றுக் கணக்கான நாவல்களை அலசிய சிவபாத சுந்தரமும் என் அளவுக்கே அதிசயப்பட்டார்கள்! ''இதே மாதிரி தீவிர ஈடுபாட்டுடன் நீங்கள் சரித்திர நாவல்கள், திரைக் கதைக்கான நாவல்கள், சிறுகதைகள் ஆகியவற்றையும் படித்திருக்க வேண்டுமே? குறிப்புக்களைக் கூடப் பாராமல் அத்தனையையும் இம்மி பிசகாமல் நினைவில் வைத்துக்கொண்டு எப்படித்தான் பேசுகிறீர்களோ'' என்று சிவபாத சுந்தரம் வாய் விட்டே வியந்தார்.

மேம்போக்காக அன்றி எதையும் ஆழ்ந்த கவனத்துடன் செய்கின்ற பாலசுப்பிரமணியம் தலைமையில் விகடன், தமிழகம் சிறக்க மற்றுமொரு பொற்காலம் படைக்கட்டும்!

-கி. ராஜேந்திரன்

உங்கள்
அழகுக்கு இன்னும்
மெருகேற்ற



# வீணை

## எம்ப்ராய்டரீஸ்

தரத்தில் உயர்ந்தது,
எம்ப்ராய்டரியில் மிகச்சிறந்தது.

உங்கள் எழிலழகு உயிர்பெற்று
வருவதற்கெனவே-வீணை எம்ப்ராய்டரி
துணிகள், துடிப்புமிக்க டிசைன்களிலே
கண்கவர் வண்ணங்களிலே அவை
மறக்க முடியாத எழிலோவியங்கள்.
திருமணங்கள், பண்டிகைகள்,
பிறந்தநாள் விழாக்கள் மற்றும்
எல்லா சந்தர்ப்பங்களுக்கும்
பரிசளிக்கத் தகுந்தவை.

தயாரிப்பாளர்கள்

**S.S.M. பிரதர்ஸ்**

த.பெ.எண் 134,
11/D காந்திபுரம் மெயின் சாலே,
கொமாரபாளையம்-638 183
தமிழ் நாடு.

மில்லின் ஷோரூம்கள்:
54, கிடங்கு தெரு.
சென்னை-600 001
போன்: 28196
40, திருவேங்கடசாமி
செட்டி தெரு ஈரோடு.
போன்: 73401



**வீணை**
பேப்ரிக்ஸ்

இன்றே வாங்கிடுவீர் அதன்
சுகத்தை அறிந்திடுவீர்.

அளிக்கும் உயர்ரக மல் வேஷ்டிகள்
சிறந்த தரக்கட்டுப்பாடுடன் உயர்ரக
பருத்தி நூலால் தயாரிக்கப்படுகிறது.
8 முழம்—மஹாராஜா, அம்பாஸிடர்,
ராஜா, ராஜாராணி
4 முழம்—கைலி வேஷ்டிகள்.

எல்லா ஜவுளி கடைகளிலும் கிடைக்கும்.




ஜனதா ஆட்சியில் செயலற்றுப் போன நிர்வாகம்
இன்னும் விழித்துக் கொள்ளவில்லை! — இந்திரா






1980 நவம்பர் 2
ரௌத்திரி ஐப்பசி 17
மலர்: 39 இதழ்: 14



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# கலைஞர் கூறுவதைக் கவனியுங்கள்!

எதிர்க் கட்சித் தலைவரின் யோசனைகளை ஆட்சியில் இருப்போர் ஒதுக்க வேண்டிய தருணங்களும் உண்டு; ஏற்க வேண்டிய சமயமும் உண்டு. அண்மையில் கலைஞர் கருணாநிதி கூறியுள்ள சில கருத்துக்கள் ஆட்சிப் பொறுப்பில் உள்ளோரின் கவனத்துக்கும் செயல்பாட்டுக்கும் உரியவை.

(1) போலீஸ்காரர்கள் ஆபத்தான பணியில் ஈடுபட்டிருப்பதால் அவர்களுக்குச் சலுகை விலையில் அரிசி வழங்கலாம் என்ற அரசின் யோசனையைக் கலைஞர் கண்டித்திருக்கிறார். ''அப்படிப் பார்த்தால் மின் தாக்குதலுக்கு உள்ளாகக்கூடிய மின்வாரிய ஊழியர்கள், பாம்புக் கடிக்கு ஆளாகக்கூடிய விவசாயிகள் முதலியோரும் ஆபத்தான பணிகளில்தான் ஈடுபட்டுள்ளனர்'' என்கிறார் கலைஞர். காரியாலயம் செல்லச் சாலையில் நடப்பதே ஆபத்தாக இருக்கும்போது யார்தான் பாதுகாப்பான பணியில் ஈடுபட்டுள்ளார்கள்? அரசு பாரபட்சமாக நடந்து கொள்கிறது என்ற அவப்பெயர்தான் மிஞ்சும்.

(2) உலகத் தமிழ் மகாநாட்டுக்கான ஏற்பாடுகள் துரிதமாக நடைபெற்று வருகின்றன. ''அதில் பங்கேற்பீர்களா?'' என்று ஒரு நிருபர் கலைஞரைக் கேட்டபோது, ''நான் முதலமைச்சர் நோக்கில் அதற்குத் தகுதி பெற்றவனல்ல'' என்ற கருணாநிதியின் பதில் அதிர்ச்சி அளிப்பதாக இருக்கிறது. விழாவுக்கு மட்டுமல்ல, விழா தொடர்பான பல்வேறு ஆலோசனைக் கூட்டங்களுக்கும் இப்போது முதலே கலைஞர் அழைக்கப்பட வேண்டும். தமிழறிஞர் என்பதோடு எதிர்க் கட்சித் தலைவர் என்பதாலும் அவர் பங்கு பெறுவது தமிழக அரசுக்குப் பெருமையே தரும். அவர் அழைக்கப்படாவிட்டால்தான் தமிழகத்துக்கே சிறுமை.

(3) அண்ணா நடத்திய உலகத் தமிழ் மகாநாட்டுக்குப் பணம் பெரும்பாலும் மக்களிடம் நன்கொடைகளாகவே பெறப்பட்டது; இதற்காக மாவட்டங்கள் தோறும் கலை விழாக்கள் நடத்தப்பட்டன என்பதை நினைவூட்டிய கலைஞர், இன்றைய அரசு நடத்தவிருக்கும் தமிழ் மகாநாட்டுக்கு ஐந்து கோடி ரூபாய் மக்களின் வரிப் பணம் செலவிடப்படவிருக்கிறது என்பதையும் சுட்டிக் காட்டியுள்ளார். வாழ்க்கைச் செலவுகள் மிக உயர்ந்துள்ள நிலையில் மக்கள் ரொம்பவும் சிரமப்பட்டுச் செலுத்தும் வரிப் பணம், மீண்டும் செல்வத்தை உற்பத்தி செய்யக்கூடிய அபிவிருத்தித் திட்டங்களுக்கு அன்றி மற்ற இனங்களில் செலவாவது கண்டிக்கத் தக்கதே. பகுதியளவேனும் மக்கள் நன்கொடை வழங்கினால் அதன் மூலம் மக்களுடைய ஒப்புதலைப் பெற்றதாகக் கருதி அதற்கு இணையாக அரசும் ஒரு நன்கொடை வழங்கி விழாச் செலவுகளை நிர்வகிக்கலாம். உலகத் தமிழ் விழாவை இன்றைய ஆட்சி தனக்குப் பிரபல்யத்தைத் தேடிக்கொள்ள வீண் செலவுகளுடன் ஆடம்பரமாகக் கொண்டாடியதாகக் குற்றச்சாட்டுக்கு உள்ளாக வேண்டாம். அடக்கமாகவும் ஆக்கபூர்வமாகவும் மகாநாடு நடந்தாலே உலகம் நம்மை மதிக்கும்.

(4) மன்றோ சிலைக்கு அடுத்தபடியாகச் சென்னை நகருக்கு எழில் தரும் சிலையைக் குறிப்பிட வேண்டுமானால் ஜெமினி மேம்பாலத்துக்கு இருபுறமும் உள்ள குதிரை — வீரன் சிலைகளையே கூறவேண்டும். குதிரைப் பந்தயத்தை ஒழிக்கத் தமிழக அரசு தைரியமாக நடவடிக்கை மேற்கொண்டதன் நினைவாக இந்தச் சிலைகள் அமைந்தன. இவற்றை உலகத் தமிழ் மகாநாட்டினையொட்டி மதுரைக்கு எடுத்துச் செல்லப் போவதாகத் தமிழக முதல்வர் அறிவித்தது தி.மு.க. வட்டாரத்தினர் சொல்வது போல வீண் வம்பை விலைக்கு வாங்குவது மட்டுமல்ல, கலைஞர் கூறுவது போல் சுப்ரீம் கோர்ட்டில் உள்ள தமிழக அரசின் வழக்கைப் பலவீனப்படுத்தவும் செய்யும். சுப்ரீம் கோர்ட் தீர்ப்புப்படி குதிரைப் பந்தயம் ஒழிகிறதோ, நடக்கிறதோ எவ்வாறாயினும் கலைஞர் ஆட்சி காலத்தில் அதனை ஒழித்துக்கட்ட ஒரு நன்முயற்சி மேற்கொள்ளப்பட்டதைச் சரித்திரம் பேசும். சிலைகளை அகற்றுவது கலைஞருக்கு மட்டும் அல்ல, சென்னைக்கே அநீதி.

# தாலி இங்கே! தங்கம் எங்கே?

அய்க்கண்




இதோ—

முதல் படமே தோல்வியடைந்த புது முகம் போல, வாடிய முகத்துடன் அறைக்குள் குறுக்கும் நெடுக்குமாக அலைந்து கொண்டிருக்கிறாரே, இவர்தான் எங்கள் தொகுதி வேட்பாளர் திரு அங்குச்சாமி.

தொடர்ந்து பதவியைப் பிடிக்கலாம் என்ற திட்டத்துடன் திமர் பல்டியடித்த 'கட்சி மாறி'யின் கனவுக் கோட்டை போல, அங்குச்சாமியின் நெடு நாளைய மனக் கோட்டை உடைந்து, ஜனதாக் கட்சிகளாகி விட்டது.

அங்குச்சாமி எங்கள் தொகுதியின் நிரந்தர எம். எல். ஏ.

எம். எல். ஏ. என்றதும் — தன் அரசியல் சாதுரியத்தால், மனைவி பெயரில் இரண்டு மூன்று பங்களா, மாமனார் பெயரில் நாலைந்து லைசென்ஸ், தம்பி பெயரில் ஏழெட்டு காண்ட்ராக்ட், மகன் பெயரில் பத்துப் பதினைந்து ஏக்கரா புறம்போக்கு பட்டா என்றெல்லாம் அலையாமல் அயராமல் உழைத்துப் பணம் சம்பாதிக்கின்ற 'பொது நலத் தொண்டர்' என்று — தப்புக் கணக்கு — மன்னிக்கவும் — சரியான கணக்குப் போட்டு விடாதீர்கள்! ஏனென்றால் எங்கள் தொகுதி எம். எல். ஏ. ஒரு 'மாதிரி' அரசியல்வாதி: மாடர்ன் பெண்களின் லோ கட் ஜாக்கெட்டுக்கும் ஹிப்ஸ்டர் சேலைக்கும் நடுவேயுள்ள இடைவெளி போல் அரசியலுக்கும் நேர்மைக்கும் பெரும் இடைவெளி ஏற்பட்டுள்ள இந்த 'ஜனநாயக' நாட்டில், எங்கள் அங்குச்சாமி ஓர் அதிசயப் பிறவி. ஆயிரத்தில் ஒருவர் — கவர்ச்சியில்லாமலே நட்சத்திரமாகிவிட்ட ஷோபா மாதிரி.

மக்களுக்குச் சேவை செய்வதற்கென்றே ஏற்பட்ட 'ஹைதர் கால' அரசியலில் பழகிப் போனவர் அவர். அவருடைய தாத்தா ஜில்லா போர்டில் மெம்பராக இருந்தவர். பிறகு அப்பா, அடுத்து சித்தப்பா, இப்போது இவர் — என்று அந்தத் தொகுதி எம். எல். ஏ. நாற்காலி இவர்கள் குடும்பத்துக்குள்ளேயே சுற்றிக் கொண்டிருந்தது.

இவரை நேர்மையான அரசியல்வாதி என்று சொல்லலாமே ஒழிய, திறமையான அரசியல்வாதி என்று சொல்ல முடியாது. கொடுக்க வேண்டியதைக் கொடுத்து, செய்ய வேண்டியதைச் செய்துகொள்ளும் சாதுரியம் இவரிடம் பூஜ்யம்.

எப்படி இருந்தாலும் இந்த முறையும் ஜெயித்து விடலாம் என்று நம்பிக்கொண்டிருந்த அவருக்கு, உச்சியில் மணி விழுந்தது போல் ஓர் அதிர்ச்சி—

அவருடைய தெருவிலேயே இருக்கிற பண்ணையார் வெள்ளைச்சாமியின் சிரேஷ்ட புத்திரன் வீராச்சாமி, இந்தத் தேர்தலில் வேட்பு மனுச் செய்து விட்டான்.

வீராச்சாமி சென்னையில் பல ஆண்டுகள் அவசரப்படாமல் நிதானமாகத் தங்கிப் படித்துஎம். ஏ. பி.எல். பட்டங்களை 'வாங்கி' வந்திருந்தான். அவன் வயிற்றுப் பிழைப்புக்கு கோர்ட்டில் தொண்டை கிழியக் கத்த வேண்டியதில்லை; ஆகவே மேடையிலே கத்தித் 'தொண்டு' செய்து பிழைக்கும் அரசியலுக்கு அரங்கேற்றமாகியிருந்தான்.

தன்னுடைய பணத்தையும் படிப்பையும் வைத்து, தேர்தலில் வீராச்சாமி மக்கள் ஆதரவைப் பெற்று விடுவான் என்று தோன்றியது அங்குச்சாமிக்கு.

அக்கினி நட்சத்திர வெய்யிலையும் மிஞ்சும் வகையில் தேர்தல் பிரசாரம் சூடுபிடித்தது. லண்டன் உலகமார்க்கெட்டில் நிர்ணயிக்கப் படும் தங்கத்தின் விலையை நம் லந்தல்பட்டிக் கிராமத்தில் அரசியல் — பொருளாதார மேதைகள் நிர்ணயித்துக் கொண்டிருந்தார்கள்.

எப்படியாவது தன் குடும்ப கௌரவத்தை நிலைநிறுத்த வேண்டும் என்று நினைத்த அங்குச்சாமியும் பணம் செல

வழிக்கத் தொடங்கி விட்டார். தரமான பத்திரிகையின் சர்க்குலேஷன் போல, அவர் கையிலிருந்த பணம் குறைந்து, கடையில் மகள் ரமாவின் திருமணத்துக்காகச் சேர்த்து வைத்திருந்த பணத்தையும் எடுத்துச் செலவழிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஒரு நாள் மாலை கடைத் தெருவுக்குப் போயிருந்த அங்குச்சாமியின் மனைவி கமலம் அங்கு ஒட்டியிருந்த ஒரு போஸ்டரைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போனாள்.

'ரமா வயசுக்கு வந்துட்டா!...
தாலி இங்கே!... தங்கம் எங்கே?'

என்று ஓர் எக்கச்சக்கமான கேள்வியைக் கேட்டுக் கொண்டிருந்தது அந்த வண்ணச் சுவரொட்டி.

திகைத்த கமலம், போஸ்டர் பக்கத்தில் போய்ப் பார்த்தாள்.

'ராமாயி...' என்று எழுதப்பட்டிருந்ததில் சில எழுத்துக்களை அழித்து 'ரமா...' என்று நவீனப் பெயராக்கி யிருந்தான் யாரோ ஒரு மாடர்ன் எழுத்தாளன்.

வேகமாக வீட்டுக்கு வந்த கமலம் கணவரிடம் குமுறிக் குமுறி அழுதாள்.

''என்னங்க, நீங்க செய்யுறது நல்லாயிருக்கா? உங்க பதவி ஆசைக்காக, மக கலியாணத்தைப் பலியிட்டுடாதீங்க!'' என்ற அந்தத் தாயின் ஒப்பாரிச் சுருதி, விலைவாசி போல் உயர்ந்தது.

ரமா பி.ஏ. முடித்துவிட்டு வீட்டிலே, கல்யாணத்துக்குத் தயாராகக் கழுத்தை நீட்டிக்கொண்டிருந்தாள். அவர்கள் ஜாதியில் படித்தவர்கள் அதிகம் இல்லாததால், அவளுக்குப் பொருத்தமான மாப்பிள்ளை கிடைப்பது கஷ்டமாயிருந்தது. படிப்பும் அந்தஸ்தும் உள்ள மாப்பிள்ளையை வலை போட்டுத் தேடிக் கொண்டிருந்தார், அங்குச்சாமி. இந்த நிலைமையில் அப்பா எம்.எல்.ஏ.வாகக் கோட்டை போவதற்காக மகள் திருமணத்துக்குச் சேர்த்து வைத்திருக்கும் பணத்தைக் கோட்டை விட்டு விட்டால் என்ன ஆவது என்று கவலைப்பட்டாள் தாய்.

''அடியே கமலம்! பணம் இன்னிக்குப் போகும்; நாளைக்கு வரும். ஆனால் குடும்ப மானம் ஒரு தடவை போயிட்டா மறுபடி திரும்பி வருமா? எவ்வளவு பணம் செலவானாலும் சரி, நான் எம். எல். ஏ. ஆகி நம் குடும்ப கௌரவத்தைக் காப்பாத்தியாகணும்'' என்று அடித்து (வார்த்தையால்தான்) பேசி மனைவி வாயை மூடிவிட்டார்.

கமலம், எங்கள் ஊர்க் கண்ணகி. (பாலசந்தர் படத்துக்கும் இக்கதைக்கும் சம்பந்தம் இல்லை.) கணவனை எதிர்த்துச் சண்டை போடும் மனைவிகளை, தமிழ்ச் சினிமாவின் அதீத கற்பனை என்று நினைப்பாளே தவிர ரியலிஸம் என்று நம்ப மாட்டாள்.

இந்தியத் தேர்தல்களுக்கே உரிய அடிதடி, கத்திக் குத்து, தீவைப்பு, வஞ்சம், கள்ள ஓட்டு, ஆள் மாறாட்டம் முதலிய சம்பிரதாயங்களுடன் தேர்தல் விழா கோலாகலமாக நடந்து முடிந்தது.



வாக்கு எண்ணிக்கை நடக்கும் இடத்துக்குச் சென்றிருந்த அங்குச்சாமி தன் தெருவில் இருந்த வாக்குச் சாவடியில் தன் குடும்பத்தினர் போட்ட மூன்று வாக்குகள் மட்டும் தனக்குக் கிடைத்திருப்பதைக் கண்டு பிடித்து அதிர்ச்சி யடைந்துவிட்டார். (அந்த மூன்று வாக்குகளின் ரகசியம் பின்னால் தெரிய வரும்போது அவர் எவ்வளவு அதிர்ச்சி அடைவாரோ பாவம்!)

'சிறு குடும்பம் போதும்' என்று ஒரே மகள் மட்டும் இருப்பது எவ்வளவு முட்டாள் தனம் என்று அவருக்கு இப்போது உறைத்தது. முக்கோணத்தைத் தாண்டிய பல கோணக் குடும்பமாக இருந்தால், இன்னும் சில வோட்டுக்கள் கிடைத்திருக்குமே!

ஒரு அரசியல் வாதிக்குப் பெரிய குடும்பம் இருக்க வேண்டும்! அப்படி இருப்பதால் இன்னொரு சௌகரியமும்செய்து கொள்கிறார்கள். தற்கால அரசியல் 'நிபுணர்கள்' — ஒவ்வொரு பிள்ளையையும் ஒவ்வொரு கட்சிக்கு அனுப்பி வைத்து எந்தக் கட்சி பதவிக்கு வந்தாலும், தன் குடும்பத்துக்கு 'நிரந்தர செல்வாக்கு' இருக்கும்படி பார்த்துக்கொள்கிறார்கள்!...

அங்குச்சாமி எதிர்பார்த்தது போலவே, வீராச்சாமி எம். ஏ. பி.எல். அவனை எதிர்த்து எல்லோருடைய டெபாசிட்டையும் காலி செய்துவிட்டு, வரலாறு காணாத வெற்றி பெற்றான்.

வாக்கு எண்ணிக்கை முடிந்ததும், அங்குச்சாமி நேரே வீராச்சாமியிடம் சென்றார்.

''தம்பி! நீ தேர்தல் களத்துக்கு வந்தாய்; நின்றாய்: வென்றாய்!... மக்கள் உனக்கு அமோக வெற்றி அளித்திருக்கிறார்கள். இனி, இந்த மக்களுக்காக நீ நன்றாக உழைத்து இந்தத் தொகுதியின் பெயரை நிலைநிறுத்த வேண்டும். இப்போது நான் உன் எதிர்க் கட்சியின் வேட்பாளர் இல்லை: உன் தொகுதி மக்களில் ஒருவன்... உன்னை நெஞ்சாரப் பாராட்டுகிறேன்...'' என்று அவர் அறிவுரை கூறி வாழ்த்திய 'அதிசய'ப் பண்பைக் கண்டு வீராச்சாமியின் மனம் நெகிழ்ந்தது.

பிறகு வெற்றி ஊர்வலம் சென்ற வீராச்சாமி அங்குச்சாமியின் வீட்டுக்குள் சென்று அவர் காலில் விழுந்து வணங்கினான். எம். எல். ஏ. ஆன பிறகு அவன், காலில் விழுந்து வணங்கியது அவரிடம்தான்!

''உங்களைப் போன்ற நேர்மையான வேட்பாளர்கள் நம்ம ஊர் ஜனநாயகத்தின் சம்பிரதாயத்தில் தோற்றுப் போவது அதிசயமில்லை.'' என்று அடக்க உணர்வோடு பேசிய வீராச்சாமியின் பண்பைப் பார்த்து—சாப்புக் கடையில் காந்திஜியின் படத்தைப் பார்க்கும் ஆச்சரியத்தோடு திகைத்து நின்றார் அங்குச்சாமி.

''நீங்கள் இந்தத் தொகுதியில் வெற்றி பெறுவதற்காக எப்படிஉழைத்தீர்கள் என்று எனக்குத் தெரியும். மிகவும் முக்கியமான காரியத்துக்காக வைத்திருந்த பணத்தைக்

---

# பரிதாபத்துக்குரிய பாம்புகள்!



பாம்புகளுடன் வாழ ஒரு போட்டி! வேலாயுதனின் ரிகார்டை முறியடித்து விட்டார் டாக்டர் டாம் நம்பி. வேலாயுதம் 119 மணி நேரம் விஷப்பாம்புகளுடன் வசித்தார் என்றால் டாம் நம்பி 220 மணி நேரம் வாழ்ந்தார். பொள்ளாச்சியில் வேலாயுதனின் தம்பி பாலகிருஷ்ணன் ஆரம்பித்த பாம்புக் கூண்டு வாழ்க்கை அடிதடி சண்டை காரணமாகக் கைவிடப் பட்டது. கோயமுத்தூரில் பார்த்தசாரதி நூறுக்கு மேற்பட்ட பாம்புகளுடன் வாழ ஆரம்பித்திருக்கிறார். சிவகாசியில் வெற்றி வேந்தன்(படம்) 162 கொடிய விஷப் பாம்புகளுடன் கண்ணாடிக் கூண்டில் வசிக்கத் தொடங்கியுள்ளார். பாம்புகளுடன் மனிதன் வாழ ஆசைப்படலாம் — உலக ரிகார்ட் ஏற்படுத்தும் நோக்கில். ஆனால் மனிதனுடன் பாம்புகள் வாழ ஆசைப்படுகின்றனவா? அதைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள்? அவற்றுக்கு நம் அனுதாபங்கள்!
(படம் உதவி: விருதை ராஜா)

கூட இதில் வாரி இறைத்து விட்டார்கள் என்பதையும் தெரிந்து கொண்டேன்... உங்களிடம் இப்போது ஒரு ரகசியத்தை வெளியிடப் போகிறேன்'' என்று வீராச்சாமி சொன்னதும், ரகசியத்தை அறியும் ஆர்வம் எழுந்தது.

''இந்தத் தேர்தலில் என்னுடையவாக்கை உங்களுக்குத்தான் போட்டேன்'' என்று வீராச்சாமி சொன்னதும் எல்லோரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்திருக்க, அங்குச்சாமிக்கு ஆச்சரியத்தோடு அதிர்ச்சியும் சேர்ந்து கொண்டது—

அந்தத் தெரு வாக்குச் சாவடியில் விழுந்த மூன்று வாக்குகளின் கணக்கு என்ன?

வீராச்சாமி எம். எல். ஏ. இப்போது அனாவசியமாகப் பொய் சொல்ல மாட்டான்.

மனைவி கமலம் பெரிய படிப்புப் படிக்காவிட்டாலும் பல தேர்தல்களில் ஓட்டுப் போட்ட அனுபவம் இருப்பதால், சரியாகச் செல்லுபடியாகும் வோட்டே போட்டிருப்பாள். மூன்றாவது வோட்டு அவரே சுயநலத்துடன் போட்டுக் கொண்டது.

அப்படியானால் பெரிய படிப்புப் படித்த மகள் ரமா—?

அங்குச்சாமி மகள் பக்கம் சந்தேகப் பார்வையை வீசியபோது, அதை எதிர்கொள்ளத் தைரியம் இல்லாமல் தலை குனிந்து கொண்டு விட்டாள் ரமா.

அப்படியானால் வயசுக்கு வந்துவிட்ட ரமாவின் ஓட்டு யாருக்கு?...

—அவருடைய மூளை 'ஸ்காட்லண்ட்யார்டு' ஆகியது...

வீராச்சாமி ஒரு தட்டில் ஐந்நூறு ரூபாயை வைத்து அங்குச்சாமியிடம் நீட்டினான்.

அவருக்குப் பறிபோன டிபாசிட்டைத் திருப்பித் தருகிறானா?...

போன ஐந்நூறு ரூபாயைத் திருப்பிக் கொடுத்து விடலாம்; ஆனால் போன குடும்ப கௌரவம்?....

''என்ன தம்பி, இது?'' என்று எரிச்சலோடு கேட்டார் மாஜி எம். எல். ஏ.

''இது நீங்க இழந்து போன டெபாசிட் பணம் அல்ல; நீங்க பெறப் போகும் மருமகனின் பரிசப் பணம்!'' என்று அவன் நிதானமான அழுத்தத்துடன் சொன்னதும் எல்லோரும் திடுக்கிட்டார்கள்.

''மாமா! ரமா கல்யாண வயசுக்கு வந்திட்டா: தாலியும் என்னிடமிருக்கிறது: தங்கமும் என்னிடம் இருக்கிறது. ஒரு நல்ல நாள் பார்த்துப் பெரியவர்களுடன் வந்து முகூர்த்த நாள் குறித்துக் கொள்ளலாம்... உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்று பணிவாகக் கேட்டான் வீராச்சாமி.

திகைத்துப் போன அங்குச்சாமி,—ரமா பக்கம் திரும்பினார்.

கொழுவிய ரோஜாக் கன்னங்களை நாணம் குங்கும வண்ணமாக்க, மலர் முகமெல்லாம் மகிழ்ச்சி பிரவகிக்க, அவள் கட்சி மாறுபவர்கள் போல, தரையைத் தாண்டித் துள்ளி உள்ளே ஓடினாள்.

கல்யாணத்துக்குச் சம்மதம் என்றால், அப்படித்தான் ஓட வேண்டும் என்று அவள் எத்தனை சினிமாக்களில், கதைகளில் பார்த்திருக்கிறாள்?



அவள் ஏற்கனவே அவனைத் தேர்ந்தெடுத்துத் தன் வாக்கையும் அளித்து விட்டாள் என்பதை அப்பா புரிந்து கொண்டார்.

சந்தோஷத்தில் தலை கால் புரியாமல் கமலம் பல்லெல்லாம் வாயாக — மன்னிக்கவும் —வாயெல்லாம் பல்லாக நின்றாள்.

தமிழ்ப் பட நட்சத்திர நடிகர்கள் போல எதுவும் பேச முடியாமல், சந்தோஷத்தில் அமிழ்ந்து போனார் அங்குச்சாமி—

முதல் கதை பிரசுரமாகி, பரிசு பெற்ற அறிமுக எழுத்தாளர் மாதிரி மாஜி எம்.எல்.ஏ.க்கு இரட்டை மகிழ்ச்சி.

தன் மகளுக்கு நல்ல மாப்பிள்ளை கிடைத்த சந்தோஷத்தை விட, தன் குடும்பத்துக்குள்ளேயே எம். எல். ஏ. பதவி தொடர்ந்து நீடிக்கிறது என்ற சந்தோஷம் அதிகமாயிருந்ததில் ஆச்சரியம் என்ன?

# வாரீர் புதுமை தவழ்ந்திட.




பார்த்தறியாப் புதுமை. பரவசக் கிளுகிளுப்பு.
லிரில். அலையெறியும் தளதள பச்சை. அதன்
நயமோ குளுகுளு எலுமிச்சை...புதுக்
குமரியாய் உங்களைப் பூரித்தெழ வைக்கும்.

**லிரில்**
புத்துணர்வு சோப்

**மனம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.**

லின்டாஸ்.LR.27-203 TH

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

வித்தியாசமாக யாரையாவது பேட்டி காண வேண் டும் என்று தீர்மானித்த பிரபல எழுத்தாளர் ஏகாம் பரம் வேலையில் இறங்கினார்.

அவர் பேட்டி கண்டது திருவாளர் விலைவாசியை.

●

**“வ**ணக்கம் மிஸ்டர் விலைவாசி. ஏன் சோர்ந்து இல்லாமல் இருக்கிறீர்கள்? உங் களைப் பேட்டி காணலாம் என்று வந்திருக் கிறேன்.''

''பேட்டி ஒன்றுதான் எனக்குக் குறைச்சல்! ஊரில் எல்லோரும் ஏசிக் கொண்டிருக்கி றார்கள். ஏதோ நான் ஒரு பாதகன் என்கிற மாதிரி கரித்துக் கொட்டுகிறார்கள்.''

''உங்களை ஏன் எல்லோரும் திட்டு கிறார்கள்?''

''ஐயோ... அவர்கள் கழுத்தை முறிக் கிறேனாம். ஏழைகளின் உயிரைப் பிழிகிறே னாம். கார்ட்டூன் போடுகிறார்கள். சாகும் மாதிரி ஓர் ஆள். அவன் தலையில் அல்லது முதுகில் ஒரு பத்து டன் எடை பாருங்கள். அதில் 'விலைவாசி' என்று எழுதுகிறார்கள். என் மனசு அவ்வளவு கல்லாம். முதுகை ஒடிக்கிறவனாம். வேடிக்கை என்னவென்றால், ரூபாய்க்கு 16 படி அரிசி விற்ற காலத்திலும்




இதே மாதிரிதான் என்னை மக்கள் திட்டிக் கொண்டிருந்தார்கள்.''

''இப்போது படி அரிசி ஆறு ஏழு விற் கிறதே....''

''தெரியும் சார். நானும் மார்க்கெட் டுக்குப் போகிறேன். வேறு சிலர் என்னை எப்படிப் படம் போடுகிறார்கள் தெரியுமா? கோரைப் பற்கள், தலையில் கொம்பு, கருப்பு மேனி, கூரிய விரல் நகங்கள், நீண்டு வளைந்த வால், அதன் நுனியில் ஒரு முக் கோணம். இப்படிக் கோரமாகப் போட்டு விட்டுப் படத்துக்கு எதிரே 'விலைவாசி அரக் கன்' என்று எழுதுகிறார்கள். நீங்களே சொல்லுங்க சார். நான் என்ன ராக்ஷஸன் மாதிரி இருக்கிறேனா?''

''சே, சே... அப்படி இல்லை. நீங்கள் அடிக்கடி ஏறிக் கொண்டே இருக்கிறீர்களே''

''அது என் சாபம். ஏறினால் என்னால் இறங்க முடியாது. ஏறாமலும் இருக்க முடி யாது. தண்ணீர் தாழுகப் பள்ளத்தில் பாய் கிறது. அதன் தலைவிதி அப்படி. நான் அதற்கு நேர் எதிர். மேலேதான் ஏறுவேன்.



என்னைப் படைத்தவனைத் திட்ட வேண்டுமே தவிர என்னை ஏன் பழிக்க வேண்டும்?''

''வாஸ்தவமான பேச்சு. ஆனால் உங் களைப் பாராட்டிப் போற்றுகிறவர்களும் இருக்கிறார்களே!''

''அது ரொம்பக் குறைவான பேர். இந்த வியாபாரிகளைத்தானே நீங்கள் சொல்றீங்க? நான் ஏற ஏற அவங்களுக்கு லாபம் ஜாஸ்தி யாகிறது. ஆனால் இவங்களும் சில சமயம் நன்றி கெட்டத்தனமாகப் பேசறாங்க. உதார ணமாக அரிசி வியாபாரி, அரிசி விலை ஏறிய தும் சந்தோஷமாக 'விலைவாசி ஏற்றமே நீ வாழ்க' என்கிறான். அவனே பக்கத்துக் கடைக்குப் போய் சர்க்கரை வாங்கும்போது, விலையைக் கேட்டதும், ''அடப் பாவி விலை வாசியே உன் பேராசைக்கு எல்லையே கிடை யாதா?'' என்று வசை பாடுகிறான். ஆக மொத்தத்தில் இந்த வியாபாரிகளும் என் னைப் பழிக்கத்தான் செய்கிறார்கள்.''

''புகழ்ச்சியோ இகழ்ச்சியோ நாலு பேருக்குத் தெரிந்த பிரமுகராக இருப்பதே அலாதிப் பெருமைஅல்லவா?''

''மண்ணாங்கட்டி. அந்தப் பெருமையின் வாயிலும் மண்ணைப் போட்டுவிட்டான் அந்தப் பெட்ரோல் பயல். அவனுக்கு விலை வாசி ஏற்றம் தட்டுப்பாடு ஆகிய இரட்டை அனுகூலம் இருக்கிறது. உலகம் முழுவதும் அவனைத் துதிக்காத நாடே இல்லை. அவனுக் காக ஏங்காத மக்களே இல்லை. அவனைப் போல் நான் என்ன, அவ்வளவு உலகப் பிர சித்தமா என்ன? போங்க சார், என் வயிற் றெரிச்சலைக் கிளப்பாதீங்க....''

''வயிறு எரிச்சலாக இருந்தால் ஒரு சோடாக் குடியுங்கள்.''

''பத்து பைசா வித்த கோலி சோடா இப்போ எண்பது பைசாவாகி விட்டது. சோடா வாங்கிக் கட்டுப்படியாகாது...வயிறு எரிந்து விட்டுப் போகட்டும்'' என்று சோக மாக விலைவாசி கூறியது. -பி. எஸ். ஆர்.



# எடுப்பான தோற்றம்
# எழிலான ஆடை

## கோஆப்டெக்ஸ்...
## பாலியஸ்டர்
## சட்டைத் துணிகள்,சேலைகள்.



கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி

சிறப்புத்
தள்ளுபடி
20%
6-11-'80 வரை

ELEGANT




# கடுகு




# பதில்கள்!

✠ மேலூர் தாசன், ஈரோடு
கே: ஒசியிலேயே பல புத்தகங்களைப் படித்துப் பயனடையும் நபர்களை எப்படி அழைக்கலாம்?
ப: 'கடுகு' என்று!

✠ அசோக்ராஜா, தஞ்சை-1
கே: தான் செய்தது தவறு என்று மனிதன் எப்பொழுது உணருகிறான்?
ப: செய்யப்போவது தவறு என்பதையோ செய்தது தவறு என்பதையோ நாம் பெரும் பாலும் உணரத் தவறுவதில்லை. ஆனால் வெளியேதான் சொல்ல மாட்டோம்.

✠ துரைபால்ராஜ், கோவை-12.
கே: தாங்கள் கொடுத்த ஊக்கத்தினால் உருவான எழுத்தாளர்கள் யாரேனும் உள்ளனரா?
ப: பலர் உருவாகி யிருக்க வேண்டும். அவர்களிடமிருந்து கேள்விகள் வருவதில்லை ஆசிரியர்கள் மீது படையெடுத்துக் கொண்டிருக்கிறார்கள் போலும்!

✠ எம். ஆர். மனோகர், பெங்களூர்-27.
கே: பாரதியாரைப் பற்றியும் காந்தியைப் பற்றியுமே பள்ளிப் புத்தகங்களில் அதிகமாகக் காணப்படுகிறதே, முன்னேற்றம் வேண்டாமோ?
ப: வேண்டும். ஆனால் பாரதிக்குப் பிறகு ஒரு மகா கவி பிறக்கவில்லையே? காந்திக்குப் பிறகு ஒரு மகாத்மா பிறக்க வில்லையே?

✠ வி. கே. சுந்தர், சென்னை-15.
கே: திருமணம் செய்துகொள்ளச் சொல்லி வற்புறுத்துகிறார்கள். ''கடுகு''ப் பெரியாரின் அறிவுரை என்னவோ?
ப: திருமணம் செய்துகொள்ள அறிவுரை கேட்பவன் முட்டாள்; அதற்குப் பதில் சொல்கிறவன் முட்டாள். திருமணம் செய்துகொள்பவன் முட்டாள்; செய்துகொள்ளாதவன் முட்டாள்.

✠ கா. ஜெயமேரி, கோவில்பட்டி.
கே: காதலித்துக் கலியாணம் செய்துகொண்ட சிலர் ஏன் எலியும் பூனையுமாக வாழ்கிறார்கள்?
ப: காதலுக்குக் கண்ணில்லை; கல்யாணத்துக்குக் கண் உண்டு என்பதே காரணம்.

✠ இளஞ்சேரன், கோபி.
கே: போர் அடிக்கும் புத்தகங்களை வீசி எறியாமல் முழுதும் படிப்பது எப்படி?
ப: அப்படிப்பட்ட புத்தகங்களை நீங்களே எழுதிவிடுங்கள். திரும்பத் திரும்பப் பல முறை விடாது படிப்பீர்கள்!

✠ ஆர். மயிலநாதன், மதுரைவாயல்.
கே: சைவம்தான் தமிழை வளர்த்தது என்பது சரியா?
ப: சைவமும் வைணவமும் தமிழை வளர்த்தன. தமிழை வளர்ப்பதில் எல்லா மதத்தினருக்கும் பங்கு உண்டு. சமீபத்தில் ஒரு வைணவக் கோவில் வெளியிட்டிருந்த நோட்டீஸிலிருந்து சில வரிகளைத் தருகிறேன்: ''திருமகள் கேள்வனாய், வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் வள்ளலாய், பிறவி நோய் அறுக்கும் மருத்துவனாய், பிணிகள் தீர்க்கும் மாமணி வண்ணனாய், அடியார்களிடத்தே தீராத மால் கொண்டு அடியார்களிட்ட வழக்காகத் தன்னைச் சமைத்துக் கொண்டு கையிலங்கு நெல்லிக்கனியாக....''

✠ சின்ன கண்ணன், சென்னை-40
கே. தமிழ் சினிமாவைப் பற்றி ஆருடம் சொல்லுங்களேன்?
ப: ரஜினியை வைத்து ஆரிய மாலா, உத்தம புத்திரன், தூக்குத் தூக்கி போன்ற படங்கள் தயாரிக்கப்படலாம். கமல் திகம்பர சாமியாராக வரலாம். அதே சமயம் பல புதுமையான கருத்துக்களும் உத்திகளும் கொண்ட படங்களும் தயாராகலாம். கவர்ச்சிக் காட்சிகள் நிச்சயம் அதிகரிக்கும். 'ஏ' படங்களும் கலர்ப் படங்களும்தான் அதிகம் தயாராகும்.

✠ ஸ்ரீநாத் கோபாலன், திருச்சி.
கே: இந்த வாரம் யாரைச் சந்தித்தீர்கள்?
ப: ஓவியர் கோபுலுவைச் சந்தித்துப் பேசவாய்ப்புக் கிடைத்தது. என்னைக் கேட்டால் கேள்வி-பதில் பகுதி எழுதக் கோபுலுவை விட்டால் சிறந்த நபர் இருக்க முடியாது என்பேன். எவ்வளவு விஷயங்களைத் தெரிந்து வைத்திருக்கிறார், கோபுலு தி கிரேட்!

✠ கே. பூரணம், திண்டுக்கல்.
கே: டப்பா கழண்டுடும் என்கிறார்களே அதன் உள் அர்த்தம் என்ன?
ப: இந்த மாதிரி மெட்ராஸ் பாஷைக்கு உரை கூற பரிமேலழகர், நயன் பெருமாள் கோனார் போன்றவர்களே இனி வருவார்கள். என்னைக் கேட்டால்? ஆளை விட்டப்பா'!

பரிசு பெறுபவர்:
கா. ஜெயமேரி,
65, லாயல் மில் காலனி,
கோவில்பட்டி.(நெல்லைமாவட்டம்)

## அத்தியாயம் 14

பெரிய பெரிய கம்பெனிகளையும் கணக்கில் அடக்கமுடியாத பணத்தையும் வைத்துக்கொண்டு திண்டாடுபவர்களை, வருமான வரி எனும் சமுத்திரம் முங்கப் பார்க்கிறபோதெல்லாம் குஞ்சிதபாதம் அவர்களைத் தம் புத்தி சாதுரியத்தால், நாவன்மையால் கரை சேர்த்து விடுகிறவர். அவருக்குப் பெண்ணாகப் பிறந்த கே.எஸ். பாமாவுக்கு அவருடைய புத்தியோ சாதுரியமோ இல்லாமற் போய்விட்டது. நாவன்மை இருந்தது. ஆனால் மற்றவர்களை உய்விக்க அது உபயோகமாகவில்லை. கிழித்துப் போடும் கத்தியாக உருவெடுத்தது.

அன்று அவள் ஜி.எச்.சில் அர்ஜுனனைச் சந்திக்க, அவனுடன் ஓரிரு வார்த்தைகள் பேசி ஒரு பரிச்சயத்தை ஸ்தாபிக்க முயன்றது வெறும் தோல்வியாக முடிந்திருந்தால் இன்னொரு முறை சென்றிருப்பாள்.

அன்று நடந்தது வெறும் தோல்வி அல்ல; சாதாரண ஏமாற்றமல்ல. அவளுடைய மண்டையில் விழுந்த அடி.



அடிபட்டால் மிருகம் மட்டும்தான் சீறிப்பாயும் என்று யார் சொன்னார்கள்? பாமாவும் பாய்ந்தாள். ஆனால் அர்ஜுன் மீது அவளால் பாய முடியவில்லை. அம்மாதான் கிடைத்தாள்.

அசோகா ஹோட்டலுக்கு டின்னருக்குப் போனவள், திரும்பி வந்ததும் வராததுமாக ஏன் தன் மீது சாடுகிறாள், எரிந்து விழுகிறாள் என்று அவளைப் பெற்றெடுத்தசுந்தரிக்குப் புரியவில்லை. ஒரு வேளை ஓட்டல் சாப்பாட்டில் உப்பும் காரமும் அதிகமோ? சிப்பந்திகள் சரியாகப் பரிமாற வில்லையோ?

''யாரெல்லாம் வந்திருந்தா டின்னருக்கு?'' என்று கேட்டாள் சுந்தரி.

''யார் வந்திருந்தா உனக்கு என்ன?''

''என்னடி இப்படி ஒரு கேள்வி கேட்டுட்டே? மரகதம் விசுவநாதன் போகப்போகறன்னா..அவ...''

''உன்னுடைய ஓல்ட் டாங்கிளைப் பற்றி என்னிடம் கேட்காதே அம்மா! எனக்குப் பற்றிக்கொண்டு வர்றது!''

''ஏண்டி....ஏன்.... உனக்கு பிளட் பிரஷர் வந்திருக்கு... இல்லாமப் போனா இப்படிக் கத்துவியா?''

''சரிசரி... உன்கிட்ட என்ன பேச்சு... நான் போறேன்.''

''மெதுவா நடந்து போ. கால் தடுக்கிமாடிப் படியில் உருளப்போறே!'' என்றாள் சுந்தரி.

''நெக்கலா இருக்காக்கும்.''

''சரிதாண்டி போடி... பெத்த தாயாரோடே வார்த்தையாடறு!''




''போறேன்... ஆறு ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போறேன்....''

''இன்னும் பாக்கியா!''

''இந்த லெவல் க்ராஸ்கேட் ஒரு என் ஜினையோ அல்லது ரயில் வண்டியையோ கலியாணம் செய்து கொள்ளாது!''

''பேத்தறியே.... பிளாட் பிரஷரோட ஜன் னியும்......''

''அம்மா!''

''குரலை உசத்தாதேடி... உன் அப்பாவே இதுவரையில் என்கிட்டே அதிர்ந்து பேசிய தில்லை.''

''ஓகே! நீ பார்த்து வைச்சிருக்கிற அர் ஜுன் என்கிற பிள்ளை என் கழுத்திலே தாலி கட்ட நான் விட மாட்டேன்.''

''ஏன், என்ன ஆச்சு?''

''ஜி. எச்.சுக்குப் போயிருந்தேன்.''

''அப்புறம்?''

பாமா நடந்ததை யெல்லாம் ஒரே மூச்சில் பொரிந்து தள்ளினாள்.

அவள் முடித்ததும், ''ப்பூ. இவ்வளவு தானா?'' என்றாள் சுந்தரி.

''இவ்வளவுதானான்னு கேட்டா என்ன அர்த்தம்? இன்னும் எவ்வளவு இருக்கணு மாம்? அது சரி, அவன் கூட வந்தான்னியே அவ யார்?''

''யாருக்குத் தெரியும்?''

''நர்ஸா?''

''அதான் தெரியாதுன்னேனே.''

''புடவை கட்டிண்டு இருந்தாளா இல்லே....''

''புடவையை வைச்சுண்டு உன்னாலே அடையாளம் கண்டுகொள்ள முடியு மாக்கும்?''

''சரி அதை விடு. அவன் கூட அவன் எப்படிப் பழகினான்?''

''நான் கூட நடந்து செல்லவில்லை.''

''சரி,விடு... நான் கவனிச்சுக்கிறேன். ஜெயா வரப்போறா...''

''ஜெயா வந்தால் எனக்கு என்ன?''

''ஏதோ ஒரு பெண்ணுடன் ஒருவன் நடந்துபோறான் என்பதற்காக அவனைத் தூக்கி எறியறது புத்தி கெட்டதனம்! நீ ஆயிரம் ஆண் பிள்ளைகளோட பேசறே, நடக்கறே, சிரிக்கிறே. உன்னை இதுக்காக யாராவது தூக்கி எறிஞ்சா, அவன் முதுகுத் தோலை நானே உரிச்சுடு வேன்!''

''அர் ஜுன் ஜி. எச். வராந்தா வில் ஒரு பெண்ணோடு நடந் தான்னு நான் எரிஞ்சுவிழலை.''

''பின்னே?''

''அவன் என்னை நடத்திய விதம்!''

''அவன் ரொம்ப நல்லவன்னு கேள்விப் பட்டிருக்கேன்.''

''அப்ப என் கண் செவிடா? என் காது குருடா?''

''மாத்திச் சொல்றே!''

''திருத்திக்கோ.''

''கார்டியாலஜி பிளாக்கிலே, நினைச்சப்போ கண்ட கண்டவா நுழையப் படாது, பாமா!''

''நான் கண்ட கண்டவனோடு சேர்த்தியா?''

''நீ யார்னு உன் நெத்தியிலே எழுதியா ஒட்டிண்டிருக்கே? பேசாமல் போய்த் தூங்கு. நான் கவனிச்சிக்கிறேன்.''

''எனக்கு அவன்....''

''மாடிக்குப் போடீ.''

பாமா போனுள்.

அன்று இரவு ஜெயாவுடன் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டதில், அவள் அன்று மாலை காரில் புறப்பட்டு விட்டதாகச் செய்தி கிடைத்தது. திருச்சியில் ஒரு கலியாணத்தில் கலந்துகொண்டு மூன்றும் நாள் சென்னை அடைவாள் என்ற செய்தியும் கிடைத்தது.

அந்த மூன்றும் நாள்தான் சுந்தரி, வேம்பு மாமியைப் பார்த்துவிட்டு ஒரு டம்ளர் எலுமிச்சம் பழ ஜூஸோ, தக்காளி ஜூஸோ கூடக் குடிக்காமல் வீடு திரும்பினுள்.

வீடு திரும்பிய அவளுக்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. அர்ஜுனனுடைய யார் ஜெயா சென்னை வந்துசேர்ந்து விட்டாள். ஜி.எச்.சில் இருக்கிறுள்.

சுந்தரி மீண்டும் உடனே காரில் ஏறினுள். அவளுடைய பெண்ணின் செவ்வாய் அர்ஜுனனின் செவ்வாயுடன் மோதினுல்தான் அவளுக்கு நிம்மதி பிறக்கும்!

ஜெயா சென்னை நகர எல்லைக்குள் வந்ததும் கணவனை நினைத்துக் கொண்டாள். அதுவரையில் மற்ற விஷயங்களைப் பற்றிச் சிந்தித்தவள் மாப்பிள்ளை ராஜாமணிக்காக மனத்தை ஒதுக்கினுள்.

கார்டியாலஜி பிளாக்கில் அவள் நடந்து, ராஜாமணியின் அறையை அடைந்தாள். கதவு சாத்தப்பட்டிருந்தது. மெதுவாகத் திறந்து எட்டிப் பார்த்தாள்.

அவளுடைய கணவர் அரைக் கண் திறந்தபடி தூங்கிக் கொண்டிருந்தார். அவருக்கு வலது பக்கத்தில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தவளாய் ஒரு பெண் புத்தகத்தில் மூழ்கிக் கொண்டிருந்தாள்.

ஒரு லேசான கனைப்பால் பெண்ணை ஈர்க்க முயன்ற ஜெயா, ''ஏய்!'' என்றுள். பெண் ஏறிட்டுப் பார்க்கவில்லை. மாறுக மாப்பிள்ளை கண் விழித்தார்.

''என்ன சார், பையன் 'ட்ரம்ஸ்' அடிக்கண்டு இருக்கான் இதைப் போய்க் 'கோட்டு வாத்யம்'னு சொல்றீங்களே?''

''இதையே அடிக்கண்டு, படிக்காம பரீட்சையில் பெயிலாகி விட்டான். அதான் அதற்கு 'கோட்டு வாத்யம்'னு பேரு சொன்னேன்!''

• பூண்டி




''மல்லிகா!''

''ஸாரி... கண் முழிச்சுட்டேளா?''

''கதவண்டை யார்னு பார்... கேட்ட குரலாகப் படறது....''

மல்லிகா பார்த்தாள். திடுக்கென்றது.

அவள் சந்தித்த கண்கள் கோபக் கனலாக அனல் வீசுவதை உணர்ந்தாள். ''உள்ளே வாருங்கள். மாப்பிள்ளை சார், உங்களைப் பார்க்க.....''

''நான்தான்!'' ஜெயா நெருங்கினுள்.

''வந்துட்டியா?'' என்றார் மாப்பிள்ளை.

''யார் இந்தப் பெண்?''

''எதுக்கு வந்தே, சொல்லாமல் கொள்ளாமல்.''

''இவ யார்னு கேட்டேன்.''

''எதுக்கு வந்தேன்னு நான் கேட்டேன்... மல்லிகா... அந்தப் பாட்டிலை எடு.''

மல்லிகா நகரவில்லை. வந்திருக்கிறவள் யார் என்று அவளுக்குப் புரிந்துவிட்டது.

''என் பெயர் மல்லிகா... நான்... நான்''

''ஷீப் கொயட்!'' என்ற மாப்பிள்ளை, ''ஜெயா, மெட்ராஸிலே உனக்கு என்ன வேலை?'' என்றார்.

''உங்களைப் பார்க்கணும், அப்புறம்...''

''அதை அப்புறம் சொல்லலாம்... என்னை எதுக்குப் பார்க்கணும்... போ. போய் உன் மூத்த பிள்ளையைப் பாரு... என்னைக் கோர்ட்டுக்கு இழுத்தவனைப் போய்ப் பாரு... புருஷனை அவமானப்படுத்தியது தன் வயிற்றில் பிறந்த பிள்ளைன்னு தெரிந்தும் அவனைப் பார்க்க ஓடினுயே, அங்கேயே போ...''

''கோபமாக இருக்கேள்.''

''சாந்தமாக இருக்கத் தெரியலை.''

''அவன் உடம்பு சரியில்லாமல் கிடந்தான்.''

''எனக்குத் தெரிய வேண்டாம்.''

''அர்ஜுனன் எங்கே?''

''தெரியாது.''

''உங்க லாயர் ஃப்ரெண்ட் குஞ்சிதபாதம்''

''அவனுக்கென்ன? மூந்தாநாள் கூடப் பார்த்தேன்.''

''அவருடைய பெண் பாமாவுக்கு...''

''என்னிக்குக் கல்யாணம்?''

''நம்ம அர்ஜுனனை.....''

ஒரு விநாடி மல்லிகா இதயத் துடிப்பை இழந்தாள்.

''ஷட் அப்!'' என்றார் மாப்பிள்ளை.

''ஏனும்?''

''எல்லாம் அப்புறம் சொல்றேன். இப்ப வீட்டுக்குப் போ... மல்லிகா, அர்ஜுனன் கிட்டே இவளை அழைச்சண்டு போ... நாலு மணிக்கு நீ திரும்பி வந்தாப் போதும்.... தூங்கப் போறேன்.''

''சரி.''

''பாட்டிலைக் கொடுத்துட்டுப் போ...''

''வந்து....''

''சொன்னபடி செய்.''

''ஸாரி சார்... நான் இந்த வேலை கெட்ட வேலையில் நரமாட்டேன்.''

''யூ ஆர் மை சர்வண்ட்.''

''அது உண்மைதான், அதனுல்தான் உரிமையுடன் மாட்டேன்னு சொன்னேன், கப்போர்டைப் பூட்டிச் சாவியையும் எடுத்துண்டு போறேன்...''

# மங்கல மதிமுகத்தில் மெருகூட்ட

# ஐடெக்ஸ்

## டீலக்ஸ் குங்குமம்

(Matt Finish)

நாடெங்கணும் நாகரீக நங்கையர்
நாடி அணிவது ஐடெக்ஸ் குங்குமம்.
மங்கையரின் மலர்முகத்தின் இன்னழகை
எடுத்துக் காட்டுவதற்கெனவே
14 கண்கவர் வண்ணங்களில் கிடைக்கிறது.

சாஸ்திரீய முறைப்படி தயாரிக்கப்படும்
ஐடெக்ஸ் குங்குமம் சருமத்திற்கு எவ்வித
தீங்கும் விளைவிக்காதது.




**ஐடெக்ஸ்** 38 வருடங்களாக உங்கள்
நம்பிக்கைக்கு உரித்தான உயர்ந்ததோர் சின்னம்.

அரவிந்த் லேபரட்டரீஸ் சென்னை 600033

Imageads-AL-1240 R-Tam.

# ஜலதோஷமும் ஃப்ளூவும்— சில முக்கிய தகவல்களும் முறியடிக்கும் முறைகளும்

''ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவின் துன்பங்களிலிருந்து விரைவில் நிவாரணம் பெற அனாஸின் பெரிதும் உதவுகிறது'' என்கிறார் நர்ஸ் நாட்டாலியா டிசௌஸா.



**ஜலதோஷமும் ஃப்ளூவும் வரக் காரணம் என்ன?**

பாதிக்கப்பட்டவர்களிடமிருந்து காற்றில் வரும் விஷ அணுக்கள் ஜலதோஷத்தையும் ஃப்ளூவையும் பரப்புகின்றன. இந்த விஷ அணுக்களை சாதாரணமாக உடல் எதிர்க்கிறது. ஆனால் அளவுக்கு மீறிய உழைப்போ, சத்துக்குறைவோ உடலைப் பலவீனப் படுத்தி, நோய் எதிர்ப் பாற்றலைக் குறைக்கிறது.

**அறிகுறிகள் யாவை?**

உடல் வலி, தலைகனம், தும்மல், மூக்கிலே ஒழுக்கு இவற்றுடன் ஜலதோஷம் தொடங்கும். குளிர், அமைதியின்மை, வியர்வை தோன்றும். இருமல், தொண்டைப் புண், பசியின்மை, உடல் சோர்வு தொடரலாம்.

**சிக்கல்கள் தோன்றுமா?**

புறக்கணித்தால் நிமோனியாவிலும், சுவாச கோசம் மற்றும் மேல் மூச்சுக் குழாயின் நோய்த் தொற்றிலும் முடியலாம்.

**அனாஸின் எப்படி உதவுகிறது?**

இது ஜலதோஷம், ஃப்ளூவினால் ஏற்படும் வேதனையைப் போக்குகிறது. உலகெங்கும் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வலி-நிவாரணியை அதிக அளவில் கொண்ட அனாஸின் சக்தி வாய்ந்தது. டாக்டரின் நம்பகமான மருந்துக் கலவை போன்றது. ஜலதோஷம் ஃப்ளூவின் முதல் அறிகுறி தோன்றியதுமே, அனாஸின் சாப்பிடுங்கள். ஒரு நாளைக்கு 4 தடவை.

**நீங்கள் வேறென்ன செய்யவேண்டும்?**

- நிறைய திரவ பதார்த்தங்கள், கொதிக்க வைத்த நீர், ஆரஞ்சு அல்லது எலுமிச்சை சாறு பருகுங்கள்.
- சத்துணவு புசியுங்கள்.
- போதிய ஓய்வெடுங்கள்.
- ஆன்டிசெப்டிக் மருந்து அல்லது உப்புக் கரைத்த நீரால் கொப்புளியுங்கள்.
- அறைகள் காற்றோட்டமாக இருக்கட்டும்.



சக்தி வாய்ந்த, நம்பகமான
மேனர்ஸ்
அனாஸின்*

இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி

அளிப்பவர்கள்: ஜெ. ஃப்ரி மேனர்ஸின் அனாஸின் பிரிவினர்.

* Regd. TM

A24-6/79.

மாப்பிள்ளை ராஜாமணி உள்ளூறக் கசிந்து போனார். அவரைப் பற்றி, அவருடைய உடல் நலனைப் பற்றி இதுவரையில் இப்படி யாரும் அக்கறை கொண்டது கிடையாது. அர்ஜுன் கூட, ஏதோ ஒரு கடமையை முன்னிட்டுத்தான் இயங்கி வருவதாகத் தோன்றியது. வந்த மூன்று நாட்களுக்குள் மல்லிகா எப்படி அவர் மனத்தைக் கவர்ந்து விட்டாள்? அவள் அருகே இருக்கும்போது அவருடைய மனைவி வேறு யாரோ ஒரு பெண்ணைப் பற்றிப் பேசுகிறாள். இது என்ன அபத்தம்?

அவர் மெதுவாகக் கண் அயர்ந்தார்.

வெளியே வந்ததும், ''நான் யார்னு உனக்கு இப்பப் புரிஞ்சுது இல்லையா?'' என்று கேட்டாள் ஜெயா.

''ஆமாம்.'',

''அவருக்கு என் மேலே கோபம்!''

''அதுவும் புரிஞ்சுது.''

''ஒரு அம்மாவுக்கு அவள் பெத்த எல்லாக் குழந்தைகளும் சமம், குட்டை நீளம்னு இருந்தாலும் விரல்கள் அஞ்சும் ஒண்ணு தான்....'' ஜெயா நடக்க மல்லிகா உடன் சென்றாள்.

''ஆமாம்.''

''ஆனா இதை அவர் புரிஞ்சுக்க மாட்டேன் என்கிறார்.... அது சரி, நீ யார்?''

''என் பெயர் மல்லிகா. இங்கே உங்க புருஷனுக்கு சிசுருஷை செய்ய என்னை ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள்.''

''யார் வேலை இது? அர்ஜுனன்தானே?''

''ஆமாம். முந்நூறு ரூபாய் சம்பளம்.''

''அதை விடு... அவர் ரொம்பக் குடிக்கிறாரா? நீ மறுப்புச் சொல்லி கப்போர்டு பூட்டைப் பூட்டியதில் எனக்கு ரொம்பத் திருப்தி.''

''தாங்க்ஸ்.''

''குடிச்சுக் குடிச்சே.... உம்... சொல்லி என்ன புண்ணியம்?''

''அவருக்கு மனசிலே சந்தோஷம் இல்லே மாமி! எவ்வளவோ வசதிகள் இருந்தும் ஒரு விசனம், ஒரு ஏமாற்றம் அவர் நெஞ்சில் புரை ஓடற மாதிரி இருக்கு...''

''நீ எங்கே குடியிருக்கே?''

''இப்போதைக்கு உங்க ஹபிபுல்லா ரோடு பங்களாவிலேதான்!''

''என்ன;''

''ஏன் மாமி திகைச்சுப் போயிட்டேள்? அர்ஜுனன்தான் அங்கே எல்லா சௌகரியமும் இருக்குன்னு சொல்லி என்னைத் தங்கச் சொன்னார்.''

''சௌகரியம்னு?'' ஜெயா மேலும் கீழுமாக அவளைப் பார்த்தாள்.

''நீங்க மனசிலே ஏதோ விபரீதமா...''

''சரிசரி நட.... அர்ஜுன் எங்கே....''

''ஜெனரல் வார்டிலே ஒரு பேஷண்டைக் கவனிக்கப் போயிருக்கார். இப்ப அவர் அங்கேதான் இருப்பார்.''ஒரு விநாடி நின்றவள், நடையைத் தொடர்ந்தாள்.

''உனக்கு எந்த ஊர்?''

''கோபிச்செட்டிப்பாளையம். உங்க ஊர் தான். ஆனால் வளர்ந்தது சத்தியமங்கலத்தில்....''

**திருடர்களுக்கு ஓர் விண்ணப்பம்**

**இங்கு பணமோ, நகையோ பெட்டியில் வைப்பது கிடையாது. ஆகையால் ஜன்னலையோ கதவையோ திறக்க முயலவேண்டாம்.**

இப்படி ஒரு விநோத விண்ணப்பம் சென்னை கிடங்குத் தெரு, கொத்தவால் சாவடி சந்திப்பில் பெருமாள் அண் கோ மாடிச் சுவரில் எல்லோர் கண்ணிலும் படும் படி உள்ளது.

— ந. சந்தானம்

''எப்படி இங்கே வந்து சேர்ந்தே?''

''விதி.''

''ஏதாவது நேர்ந்தா இப்படி ஒரு வார்த்தை கிடைச்சுடறது....''

''வேறே எதுவும் தெரியலே.''

''நாளைக்கு முழுக்க முழுக்க நீதான் அவரைக் கவனிச்சுக்கணும்.''

''சரி, மாமி.''

''ஜெயா மாமின்னு கூப்பிடு. வெறும் மாமின்னு கூப்பிட்டா, ஏதோ உறவுமுறை இருக்கிற மாதிரிப் படறது.''

''சரி, ஜெயா மாமி.''

''நாளைக்கு நானும் அர்ஜுனனும் பெண் பார்க்கப் போறோம்.''

''சந்தோஷம். இதோ, இந்த வார்டிலேதான் அர்ஜுன் இருக்கிறார்.''

''ஒரே சத்தமும் நாத்தமுமா யிருக்கே.''

''ஜெனரல் வார்டுன்னு அப்படித்தான் இருக்கும். ஆயிரத்து ஐநூறுக்கு மேலே இன்பேஷண்ட் இருக்கா.... முக்காலே மூணு வீசம் ஜெனரல் வார்டிலேதான்....''

''என் பிள்ளையின் கோலத்தைப் பாரு. எனக்கு நாக்கைப் பிடுங்கிக்கலாம் போல இருக்கு.''

மல்லிகா பார்த்தாள்.

கட்டிலிலிருந்து ஒரு கிழவியை அர்ஜுன் கை கொடுத்து இறக்கி, மெதுவாக அவளை நடத்தி வந்தான். மல்லிகாவின் மனம் புல்லரித்தது. ''சேவை செய்கிறார்.''

''தேவையில்லாத சேவை... லட்சம் லட்சமா சொத்து இருக்கு. இவனுக்கு என்ன வேண்டியிருக்கு, ஒரு அழுக்குக் கிழவியை, நாத்தம் பிடிக்கிற கிழவியை....''

''அவர் இப்பச் செய்கிற காரியம் கோடி பெறும்!'' என்றாள் மல்லிகா. (தொடரும்)



சீ.... இப்படியுமா அலைவார்கள்? ஒன்றுமே பிடிக்கவில்லை. கட்டோடு பிடிக்கவில்லை.

வித விதமான அலங்காரங்களின் பளபளப்புடன் மனிதர்கள். உள்ளே எத்தனை அலங்கோலங்களோ? அழுகல்களோ? குடலையே புரட்டி இழுக்கும் வாடை புடைய திரவங்களைத் தொப்பையில் தூக்கிக்கொண்டு 'என்னை'ப் பாரேன்...பாரேன்' என்று கண்களைப் பறித்துக் கவரும் வித விதமான கரிய, பெரிய பளபள புட்டிகள். புகை இலையின் பல அவதாரங்களிலிருந்து கும்மென்று எழும்பிச் சூழும் புகை. மசாலாவுடன்-சமைக்கப்பட்ட அரிசி, கோழி, கறிகாய்களின் மணம்... பின்னணியில் ஒலித்த இசைக்கேற்ப 'திம்திம்திம்' என்ற மண்டை இடியை அவளால் பொறுக்க முடியவில்லை. சலிப்பும் அலுப்புமாகக் கையிலிருந்த குளிர் பானக் கோப்பையை அருகிலிருந்த மேசை மேல் வைத்தாள். நிமிர்ந்தாள். எதிரே கையில் கோப்பையுடன் ஷ்யாம்.

''என்ன இப்படி உட்கார்ந்துட்டே?.... கமான் உஷா... வந்து ராஜாவை மீட் பண்ணிடு. இன்னும் ஒரே ஒரு மணி நேரம் தான். போயிடலாம்...'' அருகில் அமர்ந்து கிசுகிசுத்தான்.

ராஜா அன்றைய விருந்தின் முக்கிய புள்ளி. கால்களைப் பரப்பி, அனுவசியமான சௌகரியத்துடன் இருக்கையில் சாய்ந்திருந்தான். அருகில் 'ரேகா' ஸ்டைல், மஞ்சு பார்கவி ஸ்டைல்களில் பெண்கள். இடைச் செருகல்களாகச் சில வழுக்கை விழுந்த, விழாத, தொப்பை தள்ளிய, தள்ளாத கிழ, வாலிப ஆண்பிள்ளைகள். கிளிங் டிலிங், சத்தங்கள். கிளுகிளு சிரிப்புக்கள்.

சைத்தான்... சரியான சைத்தான்..... பொம்மலாட்டம் அல்லவா நடத்துகிறான்? இவன் அட்டகாசங்களுக்கு அளவே இல்லையோ?

''ப்ளீஸ் உஷா... வாயேன். இங்கே வந்தப்புறம் இப்படி அப்செட் ஆகி பிரயோஜனம் இல்லே.'' ஷ்யாம் முகத்தில் காதலான கிள்ளை மொழிகள் பேசும் பாவம் சொட்ட, கிசுகிசுப்பாகக் கண்டித்தான். கெஞ்சினான்.

விருந்து முடிந்து, போதையான குரல்கள் தந்த 'குட் நைட்'களைப்பெற்றுக் கொண்டு காரில் திரும்பும்போது மௌனம் சாதித்தாள். தோளில் விழுந்த கையைத் தள்ளி விட்டாள்.

வீட்டில்—

முகத்தைச் கரண்டி அலம்பி, வாய் கொப்பளித்து, காரி உமிழ்ந்து, அணிகலன்களை அவிழ்த்து எறிந்து, புடவையைக் களைந்து வீசி....

''கோவமா?''

''.....''

''சாரிடா கண்ணு!''

''......''

''பிடிக்கவே இல்ல... இல்லே?''

அதற்கும் மௌனம்.

''என்ன பண்றது... தலை யெழுத்து...''

''உஷா! இன்னி டின்னருக்கு ஒருத்தரை அழைச்சுண்டு வரேன். புளியோதரை பண்ணியா?''

''யாருக்கு மசக்கையோ?''

''வந்து.... நம்ப ராஜாதான்...''

''அவனெல்லாம் வீட்டுக்கா?'' எரிச்சல் அவள் குரலில் பொரிந்தது.

''ப்ளீஸ்,... கண்ணு... கோச்சுக்காதே.'' அவன் குரலில் தர்மசங்கடம் வழிந்தது.

சாயங்காலம் அரக்கப் பறக்க ப்ரீப் கேஸும் தினப் பத்திரிகை சுற்றிய சமாசாரமுமாக வந்தான்.

''என்ன இது? வீட்டிலேயே ஆரம்பிச்சாச்சா?''

''என்ன செய்ய.... தர்ம சங்கடம், என்ன பண்றது, ராஜாவாச்சே..''

''சீ... உங்க அம்மாவ வரச்சொல்லி எழுதிடறேன்.''

''எல்லாமே தெரிஞ்சு வச்சிருந்தும்... உஷா உனக்குக் கோபம் ஆகாதம்மா...'' அவன் ராகம் இழுத்தபடி ஒரு ஸ்பூன் புளியோதரையை வாயில் போட்டான். உஷா சிரிப்பை அடக்கினாள்.

எட்டு மணிக்கு 'டாண்' என்று ராஜா வந்தான்.

''ஹலோ ஷ்யாம்... ஹலோ உஷா...''

ஹலோ உஷாவாம்... பெரிய பெத்துப் பேர் வைத்த இவன்....

''ம்... புளியோதரை மணம் கேட்டலேயே வரவேற்கறதே.'' சம்பிரதாயப் பேச்சு, புகழ்தல். சிரிப்புக்கள். ஜோக்குகள்(?)

# உறவைச் சொன்ன ஒருவன்

சித்ரா ராமச்சந்திரன்





கடைசியில்...''வாழ்த்துக்கள் ஷ்யாம்... யுவர் கர்ல் இஸ் வெரி ப்ரைட்....'' சான்றிதழ் வழங்கினான்.

''ரொம்ப நன்னாப் பேசிண்டிருந்தியே!'' பெருமையும் நிம்மதியுமாக அவன், கழுவிய பீங்கான்களைத் துடைத்தான்.

''ஊர்வசி தரேளாக்கும்.ஆமா... இந்த ஆள் எப்படி?''

''பிக்ஷாந்தேஹி'ன்னு இவனண்ட தானே ஓட வேண்டி இருக்கு... உயரணும்னு 'பூசை' பண்ணித்தானே தீர வேண்டி இருக்கு... என்னை மாதிரி எத்தனை பேர் அவனுக்காக என்னவெல்லாமோ செய்யத் தயாரா இருக்காங்க....''

''பெண் பித்தா....?''

''சேசே... சும்மா ஒரு இதுக்குத்தான்.''

''இதுக்கும் இல்லே ஒண்ணும் இல்லே. அவன் கண்ணும் பார்வையுமே சரி இல்லே. சே. அதனுலே பெண்டாட்டி செத்திருப்பா''

''சாகல்லேடீ... ஓடிட்டா...''

ஒரு நாள்—

''உஷா.... இன்னிக்கு ஹோட்டல் அசோக்ல ராஜாவோட பார்ட்டி. கூப்பிட்டிருக்கான்.''

''இன்னிக்கா? உங்களுக்கு ரங்காச்சாரியப் பார்க்கணுமே?''

''சொன்னேன். உன்ன முதல்லே அனுப்பிட்டு, என்னை அப்புறமா வந்து சேர்த்துக்கச் சொல்றான்.''

''நான்....தனியாவா?''

''ரமா, ஜென்னி, மிஸஸ் மேத்தா எல்லாரும் வருவா.''

''நீங்களும் இப்படி பொண்டாட்டியை யூஸ் பண்ற 'சீப்' மனுஷனுயிட்டேள்....'' அவள் கண்ணீர் அவனைக் கரைத்தது.

ஒன்பது மணி அளவில் அவன் அவளை அசோக்கில் விட்டு விட்டு ரங்காச்சாரியிடம் போனான்.

அதிகம் பழகியிராத மனிதர்கள் நடுவில் ராஜாவின் துணையே தேவலை போல் தோன்றியது. அவனுக்கு அடுத்த இருக்கையில் சரண்புகுந்தாள்.

சே... அவனுடைய 'ரேகா', மங்கு பார்க்கவி' லிஸ்டில் அவளும் ஒருத்தியா? இருக்கை முள்ளாகக் குத்தியது.

''வொயின் சாப்பிடலாமே... சாப்ஃட் ட்ரிங்க்தான்....'' முகம் சிவந்து அவள் சங்கடப்பட்டதை உணர்ந்து ஜூஸ் வரவழைத்தான். இதர நண்பர்களுடன் எழுந்து போய்வந்து, கலகலத்து, இடை இடையே அவளையும் வந்து விசாரித்துக் கொண்டான்.

மிஸஸ் மெஹ்தாவும் ரமாவும் ஜென்னியும் இதர ரேகாக்களும் அவளை ஒரு தீக்ஷண்யத்துடன் பார்த்தார்கள்.

ஷ்யாம் சீக்கிரம் வரக் கூடாதா?

மெஹ்தா தம்பதி விடை பெறுகையில் அவளும் ஒட்டிக் கொள்ளப் பார்த்தாள்.

''இரு உஷா... எத்தனை நேரமானாலும் ஷ்யாம் வந்துடுவார்...''

கடைசியில் பன்னிரண்டு மணி அடிக்கும் முன் உஷாவைக் காரில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டான்.

'ஷ்யாம் இஸ் ரியலி லக்கி. உனக்கு லேட்டாயிடுத்து. பாவம். பரபரப்பா இருக்கு... இல்லே? ஹூம்..எனக்கு வீட்டுக்குப் போறதை எத்தனை தள்ளிப் போட முடியுமோ அத்தனை நிம்மதி. அங்கே என்ன இருக்கு? பெரும் தோல்விகள், சிக்கல்கள், சிதிலங்கள்....''

நிரம்பக் குடித்து விட்டானே?

''நீங்க டிப்ரெஸ்டா பேசறேள்.''

''உனக்கு டிப்ரெஸ்ஸிங்க...ான் இருக்கும்.... இதோ... வீடு வந்துடுத்து ...''

ஷ்யாம் அப்பொழுதுதான் கேட்டைத் திறந்து கொண்டிருந்தான். ''சாரி உஷா... ரங்காச்சாரிகிட்ட எதிர்பார்த்ததுக்கு மேலே நேரமாயிடுத்து. அவசரமா அசோக்குக்கு வந்துடலாம்னு, இன்னைக்குப் பார்த்து டயர் 'ப்ளாட்'. மூச்சைப் பிடிச்சுண்டு டயரை மாத்தி இப்பத்தான் ஓடி வரேன்.''

உணர்ச்சிகள் அழுத்தி வைத்திருந்ததால் பீறி எழுந்தன. அவள் விக்கி அழுதாள். முஷ்டிகளால் அவன் மார்பில் மாற்றி மாற்றிக் குத்தினாள்.

''உஷா... என்னடா.... என்னம்மா?... என்னாச்சு? அவன் ஏதாவது....''

அவள் 'இல்லே' என்று தலையாட்டிக்-கொண்டே இன்னும் அழுதாள். ஓய்ந்துவிட்டு ஷ்யாமை வைதாள். அவன் சமாதானம் செய்து, கொஞ்சி, சத்தியங்கள் செய்து.... இருவரும் ராசியாயினர்.

புளியோதரை செஷன், முறுக்கு செஷன், பார்ட்டிகள்....

அவளுக்குப் பழகிவிட்டது. பயம் போய் விட்டது. திடீரென்று ஒரு நாள் தொலைபேசியில்—

''நான் ராஜா பேசறேன். உஷா இருக்காளா?''

''என்ன சார்?''

''ஒன்னும் இல்லே... கண்டதிப்பிலி ரசம் வைக்கத் தெரியுமான்னு....''

''என்னது?''

''சாரி.ஃபார் த ட்ரபிள் ஷ்யாம். எங்கம்மாவுக்கு வயிறு பிடிச்சிண்டிருக்கு. ரொம்பக் கஷ்டப்படறாள். இதச் சாப்பிட்டாச் சரியா போகுமாம். அவளால எழுந்திருக்க முடியல்லை, மருந்து சாப்பிட மாட்டேங்கறா...''

''உஷா! பாவம்... கிழவி கஷ்டப் படுகிறாளாமே....?''

''வரேன்னு சொல்லுங்க....''

முதல் முறையாக அவன் வீட்டுக்குச் சென்றாள். வீடு அளவாக அழகாக இருந்தது. கண் பார்வைக்கு எந்த சிதிலமும் தென்படவில்லை. உள் அறையில் அவன் தாய்படுத்திருந்தாள். பழுத்த ஜீவன். முடங்கிக் கிடந்தது.

கஷாயம் உள்ளே போனதும் சைகலாஜிகலாகப் புத்துயிர் பெற்றுச் சுருசுருப்பானாள்.

''ஆருடா குழந்தை?''

---

அவர்: ''சம்பள நாளில் மட்டும் என் மனைவியைத் தாறுமாறாத் திட்டுவேன்!''

இவர்: ''ஏங்க?''

அவர்: ''மற்ற நாட்களில் திட்டினால் திருப்பித் திட்டித் தீர்த்துடுவாளே!'' • உ. ராஜாஜி



''தெரிஞ்சவர் மனைவி.'' ஏன் இந்தக் கசப்பு?

கிழவி ஏதோ முனகினாள். வியர்வையில் நனைந்து கசங்கிய ஆடைகள். கலைந்து போய்ப் பரவி நின்ற வெள்ளை கூந்தல்... சுருக்கமும் தூசியும் படிந்த படுக்கை விரிப்பு....

அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. அவனை வெளியே அனுப்பிவிட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டாள். அம்மா அவளை விடாமல் அருகில் அமர்த்திக் கொண்டு பேசினாள். பின் தூங்கிப் போனாள்.

''உஷா.... நான்.... எனக்கு....'' அவன் தடுமாற, அவள் மௌனமாக மிகுதியிருந்த கஷாயத்தை மேஜை மீது மூடி வைத்துவிட்டு வந்து அமர்ந்தாள். சமையல் அறையில் முட்டையில் ஏதோ தயாராகிக் கொண்டிருக்க, சமையற்காரன் காப்பியை வைத்துவிட்டுப் போனான்.

''அம்மாவைக் கவனிக்கிறதில்லையாம். எனக்கு அன்பில்லையாம்... பார் உஷா... வசதியான வீடு, சமையலுக்கு ஆள், டிரைவர், கார், தோட்டக்காரன் எல்லாமே வெச்சிருக்கேன். வருஷா வருஷம் திருப்பதிக்கு அனுப்பறேன். அவளுக்கு எதுவுமே பொருட்டில்லே. தானே சமைச்சுச் சாப்பிடணுமாம். மடியாம்... ஆசாரமாம்... என்னால் அதெல்லாம் கெடுகிறதாம். தன் உடம்பைத்தானே வதைச்சுண்டு...நா என்னதான் செய்ய முடியும் சொல்...''

திடீரென்று வாயில் சூயிங்கம் மென்றபடி வந்த பத்து வயதுச் சிறுமி அவளையும் அவனையும் துச்சமாகப் பார்த்தாள்.

''அனிதா.... நீ ஸ்கூலுக்குப் போகலே?''

பதில் வரவில்லை. முகச் சுளிப்புடன் உள்ளே போனாள்.

''யாருக்குமே நான் வேண்டாதவனாயிட்டேன். இந்த வீட்டைப் பொறுத்தவரை நான் ஒரு பேங்க். அவ்வளவுதான். தட்ஸ் ஆல்....'' கண்களின் ஓரங்களில் சிவப்பு படர்ந்தது.

அவள் வீட்டுக்குக் கிளம்ப எத்தனிக்கையில் சிகரெட்டும் கையுமாக, அழுக்கு உடையில் அந்தப் பதினேழு வயதுப் பையன்.—

அப்பாவைக் கண்டு பயமில்லாவிட்டாலும் ஒரு மரியாதைக்காகவேனும் அந்த சிகரெட்டை. எறிந்துவிட்டு, ஒதுங்கி இருக்கலாமே?

கேட்டைத் திறந்து கொண்டு இரைக்க இரைக்க வந்தாள் மிஸஸ் மெஹதா.

''ஹலோ ராஜா... நீங்க இன்னும் லஞ்ச் சாப்பிட்டிருக்கக் கூடாதேன்னு ஓடி வந்தேன். உங்களுக்காக ஸ்பெஷலா கொண்டு வந்தேன். சிக்கன் ஃப்ரை... ஓ... உஷா கூடவா?'' என்று கேட்டு நகர்ந்தாள்.

''நான் பணம் காய்ச்சி மரம்... என் குடும்பத்துக்கு மட்டுமா... இவங்களுக்கும்.. குடும்பப் பராமரிப்பு என் கடமைன்னு ஆயிட்டதாலே இவங்க வேஷம் போடத் தேவையில்லே. ஆனா இந்த மெஹதா, சுந்தர்ராஜன், பீட்டர், ரொசாரியோ... இன்னும் எத்தனையோ பேர்... அவங்களுக்கு என் தயவிலே கிடைக்கிற உதவிங்க விசேஷப் பரிசு போல... அந்தத்



# Agfa Photography at f/22



The Agfa Isoly-II gets every detail of a landscape or a temple. Close the aperture down to f/22 to get the greatest possible depth of field. Set the shutter speed at 1/100 second and the distance at infinity. Use slow film for greater sharpness—125 ASA. The result? A picture where every detail—from 3m. to as far as the eye can see—is perfect.

The Agfa Isoly-II is a great all-round camera. You simply adjust settings, distance and film to freeze a sports scene, get close enough to snap a leopard snarling or take a perfect picture in dim, soft light.

The Agfa Isoly-II is built to German specifications and undergoes over 100 exacting tests.

See this fine camera today at your friendly Agfa-Gevaert dealer.

**Agfa® ISOLY-II**

*for professional results.*

1st for everything in photographics





AGFA-GEVAERT INDIA LIMITED

Registered Office: Merchant Chamber, 41 New Marine Lines, Bombay 400 020 • Branches: Bombay • New Delhi • Calcutta • Madras • ® Registered Trademarks of Agfa-Gevaert, Antwerp/Leverkusen.

SIMOES/AG/4A/80

தயவைப் பெற இத்தனை வேஷங்கள்! மனசுக்குள்ளே ஒவ்வொருத்தனும் என்னைக் கரிச்சிண்டிருப்பான். ஆனா மேலுக்கு இப்படிப் புகழுறாங்க. பார்ட்டி... இப்ப வந்த கோழி... அன்பு.....அது எங்கே இருக்கு?''

மற்றொரு சிகரெட் சாம்பலாகியது.

ஷ்யாமுக்கு ரொம்பத் திருப்தி. உஷா இன்றைய நாகரிகங்களைக் கற்றுவிட்டாள். முகம் சுளிப்பதில்லை. சண்டை இடுவதில்லை. குடிப்பவனெல்லாம் படுபாவி என்று வாதிப்பதில்லை. முக்கியமாக ராஜூவை வெறுப்பதில்லை. நல்ல காலம்தான். அடிக்கடி ராஜூவின் தாய்க்குப் பேச்சுத் துணைக்காக அவளை அனுப்ப வேண்டி யிருந்தது.

''வெளக்கேத்த வர மகராசி சரியா இருக்கணும். வழிகாட்ட வேண்டியவனே தறிகெட்டு ஓடிட்டா... இந்தப் பிள்ளைகளை நா ஒண்டிக் கிழவி அறிவேயும் பெத்த பிள்ளையையே வழிக்குக் கொண்டு வர முடியாதவள் — எப்படி வளர்க்க முடியும்?'' அம்மாவின் புலம்பல்களை யெல்லாம் பரிவாகக் கேட்டுக் கொண்டு ஆதரவாகப் பேச வேண்டியிருந்தது. அவளுக்கு அனுசரணையாக அடிக்கடி போய் வந்து கொண்டிருந்ததில் அனிதாவும் பழக ஆரம்பித்தாள்.

உஷாவின் தோழமை கிட்டிய சில நாட்களிலேயே அனிதாவிடம் மாற்றம் தெரிந்தது. தன் குழப்பங்களையும் சந்தேகங்களையும் போக்கக் கூடிய அரும் மருந்தாக உஷாவைக் கருதலானாள் அனிதா.

அவள் மெல்ல மெல்ல அந்தக் குடும்பத்தில் ஒருத்தியாகத் தொடங்கி இருந்தாள்.

தன் சுய துக்கத்திலும் அந்தக் குடும்பத்தின் மகிழ்ச்சியிலுமாக அல்லாடிக்கொண்டிருக்கையில் ஒருநாள் அச்செய்தி வந்தது.

''ராஜூவுக்கு மாத்தல் உத்தரவு வந்திருக்கு....''

''!........?''

''ஆமா உஷா. அடுத்து வர்றவன் நல்லவன்தான்னு பேச்சு அடிபடறது. ஆனாலும் நமக்குத் தெரியாத தேவதையை விடத் தெரிந்த சைத்தானே மேல் இல்லே?''

அவன் சைத்தானா தேவதையா என்று ஆராய முடியாதபடி அவள் மனம் ஸ்தம்பித்தது.

ராஜூவுக்கு மாற்றல். அவன் போய் விடுவான்... இந்தச் சாத்தியக்கூறு தெரிந்த விஷயம்தான். ஆனால்... இதென்ன திகைப்பு? எதற்காக இந்தத் திகைப்பு? இந்தச் செய்தி அவளை ஏன் அப்படி உலுக்கியது? நினைக்கவே மனம் அஞ்சியது. அவன் போய்விடுவதில் ஏற்படக் கூடிய ஒரு சூன்யத்தை நினைத்தபோது மனம் கலங்கியது.

அந்த நாளும் வந்து விட்டது.

ஸ்டேஷனில் ஏகக் கூட்டத்துக்கு நடுவே ராஜூ.

ஊழிய விசுவாசத்துடன் ஒவ்வொருவராக அவனைச் சம்பிரதாயமாகப் புகழ்ந்தார்கள். மாலைகள், மரியாதைகள்!

அவள்.....

''ஆண்டி.... எங்க ஊருக்கு எப்ப வர்றீங்க?''

''கண்டிப்பா வாங்க ஆண்டி.....''



ஒருத்தி: ''உன்னோட குடிகாரக் கணவனைத் திருத்தறத்துக்கு முயற்சி செய்கிறாயாமே...! முதற்கட்டமா நீ என்ன செஞ்சே...?''

மற்றொருத்தி: ''டெலிபோனை வீட்டிலிருந்து காலி செய்திட்டேன்!''

ஒருத்தி: ''ஏன்?''

மற்றொருத்தி: ''டெலிபோன் இருந்தா 'டிரிங்க்... டிரிங்க்'னு மணி அடிக்குமே!''

- விருதை ராஜா

''நீ சீரும் சிறப்புமா இருக்கணும்டியம்மா... உன்னைப் பிரிய மனசே சங்கடப்பட்டுப் போறதும்மா கொழந்தே....''

அவன் ஆதரவாக எல்லோரையும் தேற்றிப் பதில் சொன்னான். முட்டி வந்த கண்ணீரை விழுங்க யத்தனித்தான்.

''டாடி..... ஒன்பது மணி....''

''அப்ப நா வரேன் மெஹதா, பை ரமா சரோஜ், ஸீ யூ ரொசாரியோ...ஜென்னி..'' கையாட்டல், கை குலுக்கல்.

''ஷ்யாம்.... வரட்டுமா?'' தனிப்பட்ட தோழமையில் அவர்கள் கைகள் பிணைந்து கொண்டன. அடுத்து அவன் பார்வை அவள் மீது விழுந்தது. நிலைத்தது. அதில் என்னென்ன செய்திகள் அடங்கி யிருந்தன....

அவள் உணர்ச்சிகளின் கொந்தளிப்பின் எல்லையில் மரத்து நின்றாள்.

அவன் கண்ணோரங்கள் சிவக்கத் துவங்குகின்றன. கரங்கள் குவிகின்றன.

''வரேம்மா....'' அவன் வண்டியில் ஏறினான்.

'அம்மா.....' தலையில் அடித்தது போல் ஒரு மின்னல். ரயில் நகரத் துவங்கியது.

'அம்மா....' ரயில் வேகம் பிடித்தது.

அவளுக்குப் புரிய ஆரம்பித்தது. உணர்ச்சி அலைகள் நாலிழை வித்யாசங்கள் புலப்பட்டன. அன்பின் வடிவங்களில், நிறங்களில் வேறுபாடுகள் தெளிவாகின்றன. அச்சமூட்டிய பிரேமையில், சண்டமாருதமாக வீசிய உணர்ச்சிச் சுழலில், மெல்ல மெல்ல ஓர் அமைதி நிலவுகிறது. வயது, இனம், உறவுகளுக்கு அப்பாற்பட்டு வியாபிக்கும் மனிதமனத்தில் தோன்றும் சில மௌனமான அன்பின் தன்மை தெரிகிறது. அந்தச் சந்நிதியில் அவமானங்கள் தோன்ற வேண்டாம். பயங்கள் தோன்ற வேண்டாம். மனத்தில் என்றும் கண்டிராத பேரமைதி நிலவ அவள்—

வெட்கமின்றி, பயம் இன்றி, மெலிதாக அழ ஆரம்பித்தாள்.

ஷ்யாம் அவள் தோளை ஆதரவாகப் பற்றிக் கொண்டான்.

9.11.80 கல்கி தீபாவளி சிறப்பிதழ்
அதிக பக்கங்கள்



# ஆக்ஸிடெண்ட்

ஹேமா ஆனந்ததீர்த்தன்
எழுதும் முழு நீள நாவல்



கிருபானந்தவாரியார்
வழங்கும் அருளுரைகள்

# தீபமங்கள ஜோதி

கண்ணதாசன்
எழுதும்

# மனவாசம்



ம.பொ.சி
வழங்கும்

# பாட்டுக்கொரு புலவன்

# வெந்து தணிந்த காடுகள்



தொடர் கதை

## இந்திரா பார்த்தசாரதி



மகரிஷியின்
தொடர்கதை

# விட்டில் அணைத்த விளக்கு

நவம்பர் 9 கல்கி
தீபாவளி சிறப்பிதழில்
ஆரம்பம்




கழுத்தைச் சுற்றியிருந்த அங்கவஸ்திரத்தால் — முகத்தில் அரும்பிய வியர்வையை ஒற்றிக்கொண்டே அப்பா என்னிடம் படபடத்தார்.

''என்னம்மா தாமரை? இன்னுமுமா நீ ரெடியாகலே? மாப்பிள்ளை வீட்டுக்காரங்க சரியா நாலரை மணிக்கு வந்துடு வாங்கம்மா பார்க்க வரப்போறது உன்னைத்தாங்கிற நினைப்பே கொஞ்சம் கூட இல்லாத மாதிரி முகத்தைக்கூட அலம்பிக்காம இருக்கியேம்மா? போம்மா போ. சீக்கிரமா ரெடி பண்ணிக்க.''

பஜ்ஜியையும், கேசரியையும் ஒரு வழியாய் முடித்துவிட்டு மூக்கின் மேல் படிந்த கரி மசியோடு சமையலறையிலிருந்து வெளிப்பட்ட என் அம்மாவும் அப்பாவுடன் சேர்ந்து கொண்டாள். ''நானும் அப்பவே பிடிச்ச சொல்லிச் சொல்லிப் பார்த்துட்டேன். நகர மாட்டேங்கறா... சுவத்துக்குச் சாஞ்சிகிட்டு, நகத்தைக் கடிச்சுக்கிட்டு, பாழாப்போன கதைப் புத்தகத்தைப் படிச்சுக்கிட்டே இந்நேரம் வரைக்கும் உட்கார்ந்திருந்தா. இப்ப உங்க தலையைப் பார்த்ததும்தான் எந்திரிச்சு நின்னிருக்கா....''

''சரி...சரி... குழந்தையை பார்க்க வர்ற நாள்லே அநாவசியமா அதைக் கரிச்சுக் கொட்டாதே....'' ஒரே மகளான என்னை யாராவது இரண்டு வார்த்தை கடுமையாப் பேசினா அப்பாவுக்குப் பொறுக்காது.

''இப்பக் கல்யாணம் பண்ணினா அடுத்த ஏழாவது மாசம் சீமந்தத்துக்குத் தயாரா வந்து நிப்பா... இவ! குழந்தையாம்... குழந்தை....'' — அம்மா சிடுசிடுத்தாள்.

அப்பா கோபமாய் அம்மாவைப் பார்த்தார். ''முதல்லே உன்னோட மூஞ்சியை அலம்பிக்கோ. மூக்கு மேலே வாணலி கரி அட்டையாட்டம் ஒட்டிக்கிட்டிருக்கு. வரப்போற மாப்பிள்ளைப் பையன் சிரிக்கப் போறான்...''

அம்மா முகத்தை நொடித்துவிட்டு மீண்டும் சமையலறைக்குள் நுழைந்து கொண்டாள். அப்பா வாசல் பக்கமா நகர நான் சிரித்துக் கொண்டே கொடியில் காய்ந்து கொண்டிருந்த டவல் ஒன்றை எடுத்துத் தோளில் போட்டபடி குளியலறைக்குள் நுழைந்தேன்.

இன்றைக்கு என்னைப் பார்க்க வருகிற இந்த மாப்பிள்ளையைப்பற்றி எனக்கு முன்பே தெரியும். வெங்கடேஸ்வரன் என்கிற இதே மாப்பிள்ளைதான் பக்கத்துத் தெருவில் இருக்கும் என் தோழி உதயாவைப் போன மாதம் பெண் பார்த்துவிட்டுப் போய் — அவளைப் பிடிக்கவில்லை யென்றும் உதயாவின் தங்கை பிரியாவைப் பிடித்திருப்பதாகவும் வேண்டுமானால் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புவதாகவும் கடிதம் போட்டிருந்தார்கள்.

உதயா பிரியாவை காட்டிலும் அழகில்ஒரு மாற்றுக் குறைவுதான். என்றாலும் பார்ப்பதற்கு இருவரும் லட்சணமாகத்தான் இருந்தார்கள். இருந்து என்ன செய்ய? அந்த வெங்கடேஸ்வரன் என்கிற மாப்பிள்ளைத் தடியனுக்குப் பிரியாவைத்தான் பிடித்திருக்கிறதாம். மூத்தவள் இருக்க இளையவளைக் கல்யாணம் செய்து கொடுக்கும் வழக்கம் எங்கள் குடும்பத்தில் இல்லை யென்று உதயாவின் பெற்றோர் உதட்டைப் பிதுக்கிவிட வேறு எங்கேயெல்லாமோ படையெடுத்துப் பெண் பார்த்து யாரையும் பிடிக்காமல் இப்போது என்னை இலக்காக வைத்துக் கொண்டு வரப் போகிறார்கள்.

போன வாரம் உதயாவைச் சந்தித்த போது என்னிடம் நடந்ததை யெல்லாம் கூறி அழுது தீர்த்தாள். அவளை அழவைத்த அந்த வெங்கடேஸ்வரன் இன்றைக்கு என்னைப் பார்க்க வரப் போகிறான். பொள்ளாச்சி சந்தையில் மாடு பிடிக்கப் போகிறவனுக்கும் பெண் பார்க்கப் போவதாய்ச் சொல்லிக் கொண்டு வீட்டுக்கு வீடு உலா வந்து' பொழுதைப்போக்கிக்கொண்டிருக்கும் இந்த வெங்கடேஸ்வரனுக்கும் என்ன வித்தியாசம்?

ஒரு வழியாய் ஆகாய வர்ணப் பட்டுப் புடவையில் அடக்கமாகி, அம்மா வைத்து விட்ட குங்குமப் பொட்டிலும் சூடிவிட்ட மல்லிகைப் பந்திலும் செயற்கையாய் வரவழைத்துக் கொண்ட ஒருவித அடக்கத்திலும் ஒருவனால் 'நான்' பார்க்கப்படுகிற அந்த நிகழ்ச்சிக்குத் தயாரானேன்.

கையைச் சொடுக்கி, திருஷ்டி கழித்து, 'ராஜாத்தி மாதிரி இருக்கே... என் கண்ணே பட்டுடும் போலிருக்கு' என்று அம்மா தன் மாமூலான வசனத்தைச் சொல்லிய அதே நேரம்....

வாசலில் டாக்சி ஒன்று வந்து நிற்கும் சத்தமும், இரண்டொரு நிமிடங்களுக்குப் பிறகு டாக்ஸியின் கதவுகள் திறந்து அறையப்படும் சத்தமும் கேட்டது.

''வாங்கோ... வாங்கோ...'' — அப்பா எப்படி இவ்வளவு பவ்யமாய்க் கும்பிடு போடக் கற்றுக் கொண்டார்! மத்திய சர்க்கார் அலுவலகம் ஒன்றில் ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரியின் கீழ் பணிபுரியும் மிடுக்கான அப்பா இப்படி முன் பின் தெரியாதவர்களைத் தெய்வமாய்ப் பாவித்துக் கொண்டு சேவிப்பது போல் கைகளைக் குவிப்பது எனக்கு ஆச்சரியமாய் இருந்தது. முகத்தில் இருந்த மலர்ச்சியைக் குறைய விடாமல் பார்த்துக் கொண்டார் அப்பா.

''சொன்னபடி கரெக்டா ஃபோர் தர்ட்டிக்கே வந்துட்டீங்களே! ஐ அப்ரிஷியேட் யுவர் பங்க்சுவாலிடி...'' — அப்பா தேவையில்லாமல் ஐஸ் வைத்துப் பேசினார்.

சமையலறை ஜன்னல் வழியே கழுத்தை எக்கிப் பார்த்தேன். மாப்பிள்ளை வெங்டேஸ்வரன் போட்டோவில் பார்த்த மேனிக்குப் பழுதில்லாமல் — வாட்ட சாட்டமாய் க்ரீம் கலர் சபாரி டிரஸ்ஸில் — முகத்தில் பவுடர் பூச்சுக் கொஞ்சம் அதிகமாகத் தெரிய அசட்டுத்தனமாய்ப் புன்னகைத்தபடி சோபா கம்-பெட்டில் சாய்ந்திருந்தான்.

எனக்கு மாமனாராகப் போகும் என்னைத் தோடு வந்திருந்த மாப்பிள்ளையின் வழுக்கைத் தலை அப்பாவும் மாமியார்க்கே உரித்தான உர்ராங் முகத்தோடு மாப்பிள்ளையின் அம்மாவும் தங்களுடைய இரட்டை நாடி சரீரங்களை எங்கள் வீட்டுத் தளர்ந்துபோன பிரம்பு நாற்காலிகளில் ஆரோகணிக்க வைத்திருந்தார்கள்.

''தலையைக் குனிஞ்சுக்கோ! போனதும் பெரியவங்களுக்கும் மாப்பிள்ளைக்கும் நமஸ்காரம் செய்; மாப்பிள்ளையின் அம்மா ஏதாச்சும் கேட்டா கேட்ட கேள்விக்கு மாத்திரம் வாயைத் திறந்து அடக்கமா பதில் சொல்லு. வழக்கமா எல்லார் கிட்டேயும் வாய் ஆடற மாதிரி அவங்ககிட்ட ஆடாதே:. பாடச் சொன்னு பிகு பண்ணிக்காம பாடு. சேலைத் தலைப்பை நல்லா இழுத்து விட்டுக்கோ.''

—அம்மாவின் வாயிலிருந்து சரமாரியான புத்திமதிகளை இடது காதில் வாங்கி வலது




காதில் விட்டுக் கொண்டே தாம்பூலத் தட்டோடு மாப்பிள்ளையின் முன்னால் வந்தேன். பொதுவாய் எல்லோருக்கும் சேர்த்து ஒரு சாதாக் கும்பிடு போட்டேன்.

மாப்பிள்ளை வெங்கடேஸ்வரன் என்னை இமைக்காமல் பார்ப்பது எனக்குத் தெரிந்தது. கொஞ்சம் கூட லஜ்ஜை இல்லாத பார்வை. அடித்துச் சாப்பிடப் போகும் கோழி எவ்வளவு தேறும் என்று பார்ப்பது போல் ஒரு கணிப்பு அந்தப் பார்வையில் தெரிந்தது.

''வாம்மா... உட்கார்....'' எனக்கு 'மாமியார்' ஆவதற்காக அப்ளிகேஷன்

போட வந்த அந்த அம்மாள் என்னைக் கையைப் பிடித்து உட்கார வைத்தாள்.

உட்கார்ந்தேன்.

''உன்னோட பேரென்னம்மா?'' — அந்த அம்மாள் கேட்டாள்.

''தாமரை....''

''என்ன படிச்சிருக்கே?''

''பி.எஸ்.ஸி.'' — நான் பதில் சொல்லச் சொல்ல அந்த அம்மாளின் கண்கள் சரசர வென்று என் உடலை மேய ஆரம்பித்தது. காதிலும் மூக்கிலும் கழுத்திலும் இருந்த 'தங்கச் சமாசாரங்கள்' எவ்வளவு தேறும் என்று கணக்கு பார்த்துத் திருப்தியாய்ப் புன்னகைத்துக் கொண்டாள். என் அம்மா இருந்த பக்கமாய்த் திரும்பிச் சொன்னாள்: ''பொண்ணு எங்களுக்கு ரொம்பவும் பிடித்தம்.... இதுவரைக்கும் நாங்க பெண் பார்க்கப் போன இடங்கள்லே பெண் பிடிச்சிருக்குன்னு உடனே சொல்லிட மாட்டோம். ஊருக்குப் போய்க் கடிதாசு போடறதாத்தான் சொல்லுவோம்... ஆனா உங்க பொண்ணு எங்களை இங்கேயே 'சம்மதம்' சொல்ல வைச்சுட்டா.''

என்னுடைய மாமனார்(?)கைகளில் ஜால்ரா கட்டைகள் இல்லாமலே ''ஆமா...ஆமா'' என்று தலையை ஆட்டித் தாளம் போட்டார்.

என்னுடைய அம்மா வாயெல்லாம் பல்லாகச் சிரிக்க அப்பா தம் முகமெல்லாம் வாயாகப் பூரித்துப் போனார்.

''என்னடா வெங்கடேஷ்... பொண்ணு உனக்குப் புடிச்சிருக்கா?'' — மாப்பிள்ளையின் அம்மா கண்களைச் சிமிட்டியபடி தன் மகனைக் கேட்க —

''ரொம்ப...'' — பெண் பார்த்துப் பார்த்துப் பழக்கப்பட்டுப் போய் புது மனிதர்கள், புது வீடு என்கிற ஒரு இங்கிதம்கூட இல்லாமல் மாப்பிள்ளை 'ஈ' யென்று இளிக்க —

என்னுள் பற்றி எரிந்தது.

அம்மா சின்னப் பெண்ணாய் ஓடியாடிப் பரிமாற ஆரம்பித்தாள். விரல் நுனிகளில் கேசரித் தட்டைக் காலி செய்துவிட்டு வெங்காய பஜ்ஜிகளைக் கெட்டியான தேங்காய் சட்னியில் ஆழமாய்த் தோய்த்து வாய்க்குள் திணித்து 'பேஷ் பேஷ்' என்று ராக ஆலாபனை செய்து சுடச் சுடக் கள்ளிச் சொட்டாய் இருந்த காப்பியைத் துளித் துளியாய் வயிற்றுக்குள் இறக்கிக் கொண்டு வாசனைப் பாக்காலும் ஒரு கவுளி வெற்றிலைக் கொழுந்துகளாலும் வாயை லிப்ஸ்டிக்காய்ச் சிவக்க வைத்துக் கொண்டு புறப்பட எழுந்தவர்களை ''ஒரு நிமிஷம்!'' என்று கூறி நிறுத்தினேன். எல்லோரும் முகம் மாறித் திகைத்துப் போய் என்னைப் பார்க்க —

நான் மாப்பிள்ளையின் அம்மாவிடம் கேட்டேன். ''உங்களுக்கு இவரைத் தவிர்த்து கமலேஸ்வரன் என்கிற பேரில் இன்னொரு மகன் இருக்கிறார் இல்லையா?''

''ஆமா. இருக்கான். அவன் சின்னவன். இவன் பெரியவன். ஏம்மா கேக்கறே?''

''ஒண்ணுமில்லே.. போன வாரம் அவரை ஒரு இண்டர்வ்யூல பார்த்தேன். உங்க பெரிய மகனைக் காட்டிலும் சின்ன மகன் கொஞ்சம் நிறம் கூடுதல். சுருண்ட கிராப் இல்லையா?''

''ஆமா...ஆமா...'' —

''எனக்கு அவரை ரொம்பவும் பிடிச்சிருக்கு... உங்களுக்கு ஆட்சேபணை இல்லையானா உங்க சின்ன மகனுக்கு என்னைப் பாருங்களேன்....''

''தாமரை! என்ன பேச்சுப் பேசறே?''— அப்பாவின் குரலில் கோபம் வெடிக்க—

அம்மா பதற்றத்தோடு ஓடிவந்தாள்!

''மிஸ்டர் வெங்கடேஸ்வரன் சார்! நீங்க மட்டும் ஒரு இடத்துல அக்காவைப் பெண் பார்க்கப் போயிட்டு அழகா இருக்கிற தங்கச்சியைப் பார்த்த பின்னாடி அவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க முடியுமான்னு கேக்கலாம். அதையே நான் மட்டும் திருப்பிக் கேட்கக்கூடாதா? தனக்கு வரப்போகிற மனைவி அழகா இருக்கணும்னு நினைக்க உங்களுக்கு எவ்வளவு உரிமை இருக்கோ அதே மாதிரி தனக்கு வரப்போகிற கணவனும் அழகா இருக்கணும்னு ஒரு பெண் நினைக்க உரிமை இருக்கு. நீங்க அக்காவைப் பார்க்க வந்துட்டு அழகா இருக்கிற தங்கச்சி மேலே ஆசைப்பட்டா - இன்னொருத்தி உங்களைத் தவிர்த்துவிட்டு உங்க தம்பி மேலே ஆசைப் படக் கூடாதா என்ன? என்னோட பேச்சைக் கேட்டு உங்களுக்கு ஆத்திரமும் கோபமும் அவமானமும் ஒண்ணாக் கலந்து வரலாம். ஆனா இதே கோபமும் ஆத்திரமும் அவமானமும் நீங்க நிராகரிச்ச அந்த உதயாவுக்கும் ஏற்பட்டிருக்கும்கிறதை மறந்துடாதீங்க.... நான் பேசின இத்தனை பேச்சுக்குப் பின்னாடியும் நீங்க என்னைக் கல்யாணம் பண்ணிக்க விரும்புவீங்கன்னு நான் எதிர் பார்க்க மாட்டேன். உங்க கிட்ட ஒரு சின்ன ரிக்வெஸ்ட் மட்டும் கேட்டுக்கறேன். கல்யாணமாகாத என்னை மாதிரி இருக்கிற ஆயிரக் கணக்கான பெண்களின் சார்பில் கேட்டுக்கிறேன். பெண் பார்க்கிற வைபவத்தை ஒரு ஹாபியா நினைச்சுக்கிட்டு பல பெண்களோட கண்ணாடி மனசுகளை நொறுங்கடிச்சுக்கிட்டு இனி மேலும் வீடு வீடாப் புகுந்து வராதீங்க... ப்ளீஸ்!''

நெற்றியில் வியர்வை துளிர்க்கப் பேசி முடித்தேன்.

இருண்டுபோன முகங்களோடு அவர்கள் டாக்ஸியை நோக்கி நடக்க—

அம்மாவும் அப்பாவும் பிரமித்து நிற்க —

நிறைந்துபோன மனத்தோடு நான் என் அலங்காரங்களைக் களைய ஆரம்பித்தேன்.





திருச்சியில்
தரமான ரெடிமேட்
ஆடைகள் நியாயமான
விலையில் வாங்க
கிடீஸ்
கார்னர்
தொலைபேசி
23933
35, சிங்காரத்தோப்பு, திருச்சி-620 008

சியாமளா சொன்னது மூர்த்திக்கு ஆச்சரியத்தைத் தந்தது. நிஜமாகத்தான் சொல்லறியா?''

''பின்னே என்ன பொய் யாவா? அம்மா

பாவம் சங்கரனோட அங்க வருஷமா இருக்காள். அம்மாவுக்கும் பெண்ணோ இருக்கணுமென்று ஆசை இருக்காதா. அக்கா சுமதியோ லண்டனில் இருந்து கொண்டு ஏனென்றுகூடக் கேட்பதில்லை. நம் கூடத்தான் இருந்து விட்டுப் போகட்டுமே! உங்களுக்கு ஆட்சேபனை இல்

வாதூலன்

# பூஜ வந்த வேளை..





## சுஜாதா தோற்றார்!

சுஜாதா; புஷ்பா தங்கதுரை போன்றோர் போட்டி போட்டுக் கொண்டு எழுதிக் குவிக்கிறார்கள், அவர்களும் நாக் அவுட் ஆகி விழ வேண்டியது தான் கோன்ஸாலிக் முன்னால்.

மேற்கு ஜெர்மானிய எழுத்தாளர் கோன்ஸாலிக் 85 நாவல்களை இதுவரை எழுதியுள்ளார்! இவற்றில் பல சஞ்சிகைகளில் தொடர்கதைகளாக வெளிவந்தவை. 85 நாவல்கள் எழுதியது பெரிய விஷயமில்லை. இப்பொழுது ஒரே சமயத்தில் பதினேழு நாவல்களுக்கான தலைப்புக்கள் கதைச் சுருக்கங்களை மூன்று பதிப்பாளர்களுக்குத் தந்துவிட்டு, பதினேழையும் ஒரே சமயத்தில் எழுதி வருகிறார்! இவரது நாவல்கள் இதுவரை மொத்த செலாவணி: 45 மிலியன் பிரதிகள்! மேற்கு ஜெர்மானிய நாவல் உலகில் விற்பனையில் இவரை மிஞ்சியவர் யாருமில்லை!

- ஆதாரம்: ஸ்காலா

லையே?" என்று சியாமளா படபடவென்று பொரிந்து தள்ளினாள்.

மூர்த்தி உடனே பதில் சொல்லவில்லை. அவனுக்கு என்ன ஆட்சேபனை இருக்க முடியும்? தாயார் தகப்பனார் யாரும் கிடையாது. ஒரே தமக்கை. கல்யாணம் ஆகித் துபாயில் குடியும் குடித்தனமுமாக இருக்கிறாள். தன் குடும்பமும் பெரிசு இல்லை. இரண்டு பிள்ளைகள் தான். சொல்லப் போனால் மாமியார் கூட வந்திருப்பது சௌகரியமாகத்தான் இருக்கும். ஆனாலும் திடீரென்று சியாமளாவுக்கு இந்த எண்ணம் தோன்றியது ஏன்? அதுதான் அவனைக் குடைந்தது.

மெதுவாக, "இல்லை, இவ்வளவு நாள் சொல்லலியே! இப்ப என்ன திடீரென்று?" என்றான்.

"மூணு மாசம் முன்னாடியே ரமணியோட கல்யாணத்துக்கு பம்பாய் போனபோதே அம்மா லேசா கோடி காட்டினாள். 'சங்கரண்ணாவுக்கும் குடும்பம் பெருகிப் போச்சு. எனக்கும் ஒரு சேஞ்ச் இருந்தாத் தேவலை'ன்னு ஜாடையாச் சொன்னாள். நானும் யோசித்துப் பார்த்தேன். இருக்கட்டுமே வந்து! வரச் சொல்லி லெட்டர் போட்டிருக்கேன். போட்டதில் தப்பு இல்லையே?"

"ஒரு தப்பும் இல்லை. பேஷாச் செய்" என்றான் மூர்த்தி.

பாகீரதியின் வருகை மூர்த்திக்குச் சௌகரியமாகத்தான் இருந்தது. சும்மா சொல்லக் கூடாது. மூன்று நாள் லீவின் போது, வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு "தீப்பெட்டி எங்கே?", "உப்பு எங்கே?" என்று எரிச்சலுடன் கர்ஜனை செய்ய வேண்டிய அவசியம் இல்லை. எப்போதாவது ஒரு தரம் வீட்டைப் பூட்டிக்கொண்டு சினிமாவுக்குப் போகும் போது அக்கம் பக்கத்தில் சொல்லிவிட்டுப் போக வேண்டிய நிர்ப்பந்தம் கிடையாது.

சில சமயங்களில் தொண தொணப்பு இருக்கத்தான் செய்தது.

**பா**கீரதி வந்து கிட்டத்தட்ட ஒரு வருடம் போல ஆகிவிட்டது. அன்று ஆபீசிலிருந்து திரும்பி வந்த மூர்த்தி, மேசையில் கிடந்த தபால் உறையைக் கண்டு திகைத்தான். அட, வெளி நாட்டிலிருந்து சுமதி லெட்டர் போட்டிருக்கிறாள் போல் இருக்கிறது! அவளுடன் மறுபடியும் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறாளா என்ன சியாமளா?

"சியாமளா!" என்று கூப்பிட்டதுமே ஓடி வந்தாள் அவள். மேஜையிலிருந்த கவரைப் பார்த்து, "சே, மறந்தே போய் விட்டேன். பாலுவுக்கு ஃபாரின் ஸ்டாம்ப் எடுப்பதற்காக வைத்திருந்தேன்" என்றாள்.

"ம்... உன் அக்கா மறுபடியும் லெட்டர் போடுகிறாளா?"

"எல்லோருக்கும் ஒரு சமயம் இல்லாவிட்டால் ஒரு சமயம் மனிதர்கள் தேவையிருக்காதா?" என்றாள் சியாமளா பட்டும் படாததுமாக. உள்ளேகுரல்கொடுத்து "பாலு! அந்த ஸ்டாம்ப் புத்தகத்தை அப்பாவிடம் காண்பி" என்றாள்.

பாலு ஓடிவந்து புத்தகத்தைக் காண்பித்தான். மூர்த்தி அதைப் புரட்டிக் கொண்டே இருந்தான். சட்டென்று அவனுக்கு உறுத்தியது. ஒரு ஸ்டாம்ப்! ஒன்று? இல்லை. நிறையவே... லண்டனிலிருந்து... அப்படியானால் கொஞ்ச மாதமாகவே சுமதியுடன் சியாமளா கடிதத் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறாளா? ஏன் இதைத் தன்னிடம் சொல்லவில்லை?

ஒரு நிமிடம்தான் இது போன்ற நினைப்பு ஓடியது. சட்! வெகு காலம் கழித்து அம்மா வந்து இருக்கிறாள். பெண்களுக்கும் தாய்க்கும் இடையே எத்தனையோ இருக்கும். இதைக் குறுக்கு விசாரணை செய்வதில் இங்கிதம் இல்லை.

சில நாள் கழித்து சியாமளா மெதுவாக மூர்த்தியிடம், "கோபித்துக்கொள்ள மாட்டீர்களே?" என்றாள்.

"என்ன?"

"ஒரு ஃபிரிட்ஜ் வாங்கலாமென்று பார்க்கிறேன் வசந்தா கிட்டேயிருந்து. அவர்களுக்கு ஷில்லாங் மாற்றலாகி விட்டது. விற்றுவிடப் போகிறார்கள். மூவாயிரம் ரூபாய்தான்!"

மூர்த்திக்கு ஆச்சரியமாயிருந்தது. பண விஷயத்தில் அவன் தலையிடுவதே கிடையாது. சம்பளம் மொத்தமும் மனைவியிடம் கொடுத்துவிட்டு, மாசச் செலவுக்கு எனப் பெற்றுக் கொள்வது வழக்கம். சில ஆண்டுகளாகவே 'ஃபிரிட்ஜ்' வாங்க வேண்டும் என்று நினைத்தது உண்டுதான். ஆனால் எங்கே முடிகிறது!

''என்ன, அம்மாவுக்கு ஐஸ்கிரீம்செய்து போடப் போகிறாயாக்கும்! ஜமாய்'' என்று கிண்டல் செய்தான். பின் ஏதோ நினைவில் ''இன்ஸ்டால்மெண்டிலா வாங்கப் போகிறாய்?'' என்று கேட்டான்.

''சே! செகண்ட் ஹாண்ட் மாதிரி தானே? ஆனால் நல்ல க்வாலிடி. டவுன் கேஷ்!''

ஒரு வாரத்துக்கெல்லாம் அந்த வீட்டில் குளிர் சாதனப் பெட்டி வந்து இறங்கியது. சியாமளாவின் வதனத்தில் பெருமையும் கர்வமும் பொங்கித் ததும்பியது. வீடு ஏற்கனவே சின்னதாகக் கச்சிதமா யிருந்து. இதற்கு மாத்திரம் தான் இடம் என்று சொல்வது மாதிரி ஓரிடத்தில் அழகாகப் பொருந்தியது.

விகவும், பாலுவும் குதித்துக் கூத்தாடினார்கள். ''ஹைய்யா, இனிமேல் ஐஸ் தண்ணி சாப்பிடலாம்.''

மூர்த்தி வேறு யோசனையில் மூழ்கினான். ஏதோ ஒரு வேகத்தில் வாங்க அனுமதி தந்தாகி விட்டது. இனிமேல் கரண்ட் சார்ஜ் அதிகமாகும். அவ்வப்போது 'ரிப்பேர்' ஏதாவது வரும். அதற்கு வேறு 'சார்ஜ்'. இதையெல்லாம் சியாமளா யோசிக்கவே யில்லையா?

''ஐஸ் வாட்டர், கூல் ட்ரிங் எல்லாம் சாப்பிடலாம். ஆனால் எலக்ட்ரிக் பில் வரபோதுதான் ஷாக் அடிக்கும்!'' என்றான் மூர்த்தி.

சியாமளா மூர்த்தி சொன்னதைக் கவனிக்கவே யில்லை. முகத்தில் பெருமை பூரிக்க, வனப்பான 'ஃப்ரிட்ஜை'யே நோக்கிக் கொண்டிருந்தாள்.

பாலு, ''அம்மா! இனிமே கணேஷ் வீட்டிலே இருக்கே அந்த மாதிரி டி.வி. வாங்கணும் அம்மா!'' என்றான்.

''கேட்டீர்களோ இல்லையோ, பாலு சொல்வதை?''

''சரி சரி! ஏற்கனவே தலை வழுக்கை ஆகிக் கொண்டு வருகிறது. இனிமேல் மொட்டை ஆகிவிடும்.''

''சும்மா ஏதாவது சொல்லாதீர்கள். எல்லாம் வாங்கலாம்.''

சியாமளா சொல்லியது அவன் மனத்தில் லேசாக நெருடியது. பணம் எங்கே யிருந்து வருகிறது?

என்ன கிழமையோ அன்றைக்குத்தெரியவில்லை. வீட்டுக்கு மூர்த்தி திரும்பியபோது யாரையும் காணோம். வீடு பூட்டியிருந்தது. பரபரவென்று இங்கு மங்கும் பார்த்தான். அடுத்த ஃப்ளாட்டிலிருந்து பளிச்சென்று முகம் மட்டும் தெரிந்தது. சாவியைக் கொடுத்து ''சியாமளா ஹாஸ்பிட்டலுக்குப் போயிருக்காள். அம்மாவுக்கு உடம்பு சரியில்லை'' என்றாள்.

மூர்த்திக்கு ஆச்சரியம். இதுநாள்வரை ஒரு நேரம் கூட முடியாதென்று பாகீரதி படுத்துக் கொண்டது இல்லை. இப்போது ஆஸ்பத்திரிக்குக் கூட்டிப் போக வேண்டிய அளவு என்ன ஆயிற்று? அவனுள் கலக்கமும் பதற்றமும் எழுந்தன.

சற்று நேரத்துக்கெல்லாம் சியாமளா அம்மாவுடன் திரும்பி வந்தாள். பாகீ

ரதியின் உடல் முழுக்க சோர்வு புலப்பட்டது. சியாமளா முகம் பூரா கண்ணீர். ''அம்மாவுக்கு வயிற்று வலி கொஞ்ச நாளாகவே இருந்தது. இன்று ரொம்ப ஜாஸ்தி ஆகி எக்ஸ்ரே எடுத்தது. என்னவோ பேரியம் டெஸ்ட் எடுக்கணுமாம்'' என்று சொல்லும்போதே அழுது விட்டாள்.

''பூ... இதற்குப் போய் ஏன் அழறே? எல்லாம் சரியாகிவிடும்'' என்றான், மூர்த்தி சமாதானமாக.

சரியாகவில்லை. ஏகப்பட்ட சோதனைகள் செய்தார்கள். நிறைய மாத்திரை. ஏதோ ஸ்டோன் இன் த கால் பிளாடர்' என்று பெயர் சொன்னார்கள். ஆபரேஷன் செய்ய வேண்டுமாம். சியாமளாவுக்கு ஒரே கவலையாகி விட்டது. ''சங்கரண்ணாவுக்கு எழுதி பம்பாயிலிருந்து அவனை வருவிக்கலாமா?''

ஊஹூம். நேரமில்லை. யோசித்து முடிப்பதற்குள் விரைவிலேயே ஆபரேஷன் செய்யும்படி ஆகிவிட்டது. சக்ஸஸ்தான். ஆனால் அம்மாவின் உடம்புதான் ரொம்பத் தளர்ந்து விட்டது.

வீடு ஒரு குட்டி க்ளினிக் ஆகிவிட்டது. சியாமளாவின் கவர்ச்சியும் பூரிப்பும் எங்கோ ஒளிந்து கொண்டு விட்டன. எதற்கெடுத்தாலும் கோபம்.

திடீரென்று ''இந்த 'ஃப்ரிஜ்ஜை' விற்றுவிடப் போகிறேன்'' என்றாள் அவள்.

''சே, அதனாலா அம்மாவுக்கு வந்து விட்டது? வயதானால் முன்னே பின்னே தான் இருக்கும்'' என்றான் மூர்த்தி.

''இல்லை. அது வாங்கின வேளை சரியாக இல்லை.''

''ஆமாம்பா... எனக்குக்கூட ஃபாரின் ஸ்டாம்ப் கிடைப்பதே யில்லை!'' என்றான் விக திடீரென்று.

என்ன இவன் சம்பந்தமில்லாமல் உளறுகிறான் என்று மூர்த்தி திகைத்தான்.

''என்னை மன்னித்துவிடுங்கள். நான் பாவி, மகா பாவி...'' என்று கதறினாள். ''பம்பாய்க்கு நேரில் போனபோதுதான் தெரிந்தது. கமதி, சங்கரண்ணாவுக்கு மாசா மாசம் ஐம்பது பவுண்ட் அனுப்புகிறாளென்று! அது அம்மாவுக்காகவாம்! சரி, நாம் வைத்துக் கொண்டால் நமக்குப் பணம் அனுப்புவாளே யென்று நினைத்துக் கூட்டிக் கொண்டு வந்தேன். எல்லாரும் அம்மாவை ஆசைக்கு வைத்துக் கொள்வார்கள். நான் சுயநலத்துக்கு—'' சியாமளாவின் விசும்பல் நிற்கவே யில்லை. விசும்பலின் நடுவே ''இப்போ ரெண்டு மாசமா என்ன காரணமோ தெரியவில்லை. கமதி அனுப்புவதில்லை'' என்றாள்.

மூர்த்தி பிரமித்துப் போனான். பளிச்சென்று திரை விலகி, உருத் தெரிந்தாற் போலிருந்தது. அம்மாவை அவசரமாக வரவழைத்தது, கமதியின் கடிதம், 'ப்ரிஜ்' வாங்கினது — எல்லாவற்றுக்கும் பின்னணி புரிந்தது. சியாமளாவைப் பார்க்கும் போது பரிதாபமாக இருந்தது. அதே சமயம் கன்னத்தில் பளாரென்று ஓர் அறை வைக்க வேண்டும் என்ற ஆத்திரமும் பீறிட்டது.

ஆத்திரத்தை அடக்கிக் கொண்டான். சிறிது தள்ளி மயக்கத்தில் உறங்கிப் போனவள் மாதிரி படுத்துக் கிடக்கும் பாகீரதியைப் பார்த்தான். பச்சாதாபம் மேலிட்டது.

''யார் பணம் அனுப்பினாலும் அனுப்பா விட்டாலும் சரி; இனி கடைசி வரை அம்மா நம்முடன்தான் இருக்கவேண்டும்'' என்றான் அமைதியாக.

## கராத்தே பயிற்சி 12

பயிற்சி : டோனி பொன்னையா
சித்திரம் : படம் : உத்ரா தயாரிப்பு : குன்றுமணி



MIDDLE OUTER FORE ARM BLOCK.





உடலின் மார்பளவுக்கு வரும் குத்துக்களைத் தடுப்பதற்கு இந்த MIDDLE OUTER FORE ARM BLOCK முறையே சிறந்தது. எவ்வளவு வேகமாகவும் சக்தி உள்ளதாகவும் குத்துக்கள் முன் புறம் வந்தாலும் இம்முறையில் மிக எளிதாகவும் பாதுகாப்புடனும் தற்காத்துக் கொள்ளலாம்.

பெரும்பாலான கராத்தே வீரர்கள் இம்முறை தடுத்தலை பயிற்சியின் போதோ, சண்டையிடும் போதோ (SPARRING) மிக அதிகமாய் பயன் படுத்துவார்கள். இது சரியான தற்காப்பு முறை.




இதோ நான் உட்கார்ந்து கொண்டிருக்கிற மணையைப் பார்த்தவுடன் இதைப் பண்ணின ஒருத்தன் இருக்க வேண்டுமென்று தீர்மானிக்கிறீர்கள். அங்கே, இதே மரத்தால் ஆனதுதான் — 'ஆனது' என்ன? மரத்திலிருந்தே விழுந்ததுதான் — ஒரு கிளை கிடக்கிறது. அதைப் பார்த்தவுடன் ஒரு தச்சன் பண்ணியிருப்பதாக யாரும் நினைப்பதில்லை. ஏன்? இந்த மணையை ஒரு சீராக, ரெக்டாங்கிளாக (நீள் சதுரமாக) இழைத்திருக்கிறது. பூமியின் தூசு தும்பு படாதபடி பூச்சி பொட்டு ஏறாதபடி இதிலே கீழே கட்டைகள் அடித்திருக்கிறது. இம்மாதிரி இதிலே ஒரு ஒழுங்கு ஏற்பட்டிருப்பதாலும் உட்கார உபயோகமாகணும் என்ற பர்பஸில் (நோக்கத்தில்) இந்த மணையில் இந்த ஒழுங்கை உண்டாக்கியிருப்பதாலும் இதற்கு ஒரு கர்த்தா இருக்கணும் என்று முடிவு செய்கிறோம். ஜடமான ஒரு மரப் பீஸ் தானாகத் தன்னை ரெக்டாங்கிளாக இழைத்துக்கொண்டு, கட்டை அடித்துக் கொண்டு மநுஷ்யான் உட்காரணும் என்ற பர்பஸை ஃபுல்ஃபில் பண்ணும்படியாக (நோக்கத்தை நிறைவேற்றுவதாக) ரூபம் கொள்ள முடியாது என்பதால் புத்தியுள்ள ஒரு ஜீவன் தான் இதைச் செய்திருக்கணும் என்று தீர்மானிக்கிறோம்.

அங்கே கிடக்கிற கிளையோ முண்டும் முடிச்சுமாக இருக்கிறது. இந்த மணையில் இருக்கிற 'ஆர்டர்' அதில் இல்லை; அது எந்த பர்பஸையும் ஃபுல்ஃபில் பண்ணவுமில்லை. அதனால் இதிலே ஒரு ஜீவனின் புத்தி விலாசத்தை நாம் நினைப்பதில்லை.

அந்த மரத்துக்கு அடியிலே மாவடு அதுபாட்டுக்கு ஆர்டருமில்லாமல், பர்பஸுமில்லாமல் உதிர்ந்து கிடந்தால், யாரோ அதைக் கொட்டினதாக நாம் நினைப்பதில்லை. தானே விழுந்திருக்கிறது என்றே புரிந்து கொள்கிறோம். அதுவே, அந்த மாவடுவையெல்லாம் அங்கே குவித்து வைத்திருந்தால், குவிப்பு என்ற ஆர்டரில் மாவடுக்களை அமைத்த ஒருத்தன் இருந்தாகணும்; அவன் அதை வீட்டுக்குக் கொண்டு போவது அல்லது விலைக்கு விற்பது, அல்லது ப்ரீயாக விநியோகிப்பது என்ற ஏதோ ஒரு பர்பஸுக்காகக் குவித்திருக்க வேண்டுமென்று தீர்மானிக்கிறோம்.

ஆர்டர் இல்லாமலே கூட பர்பஸ் இருப்பதுண்டு. ஒரு வீட்டில் துணி மணி, பாத்திரம் பண்டம், புஸ்தகம் கிஸ்தகம் எல்லாவற்றையும் வாரி இறைத்து ஒரே டிஸ்-ஆர்டராக இருந்தாலும், திருட வேண்டும் என்ற பர்பஸுக்காகத் திருடர்கள் இப்படிப் பண்ணியிருக்கிறார்கள் என்று புரிந்துகொள்கிறோம்.

மொத்தத்தில் ஆர்டரோ, பர்பஸோ, இரண்டுமோ இருந்து விட்டால் அது புத்தியுள்ள ஒரு ஜீவசக்தி பண்ணின காரியம்; ஜடமே பண்ணிக் கொண்டதில்லை என்று 'இன்ஃபர்' (அநுமானம்) செய்கிறோம்.

இப்போது யாரும் பண்ணினதாகத் தோன்றாத அந்தக் கிளை, அதற்கு மூலமான தாவர வர்க்கம் பற்றிக் கொஞ்சம் ஆலோசிக்கலாம். முண்டும் முடிச்சுமாயிருக்கிற அந்தக் கிளைக்குள் நமக்குள் ரத்தக் குழாய் ஓடுகிற மாதிரி பூமிக்குள்ளிருந்து ஜலத்தை உறிஞ்சு எடுத்துக் கொண்டு போகிற அதி நுட்பமான குழாய்கள் ஆச்சரியமான ஒழுங்கோடு, அதாவது ஆர்டரோடு, நேற்றைக்கு அது மரத்தில் அங்கமாயிருந்த வரையில் வேலை பண்ணிக் கொண்டிருந்தன— மரம் வளர வேண்டும் என்ற நோக்கத்துக்காக. இந்த முண்டு முடிச்சிலே லிங்க் மாதிரி துளிர் உண்டாகிறது. இலையில் ஓடுகிற நரம்புகளில் எத்தனையோ ஆர்டர். அது 'க்ளோரோஃபில்' என்கிற ஆஹாரத்தை உண்டு பண்ணும் பர்பஸையும் ஸெர்வ் பண்ணுகிறது. முண்டு முடிச்சிலேயேதான் பரம மிருதுவான புஷ்பமும் உண்டாகிறது. தாவரவர்க்கத்தில் பூச்செடி, பழ மரம் என்று இரண்டு. பூச்செடியில் அழகழகாகப் புஷ்பம் உண்டாகிறது. அதன் டிஸைன்களில் அலாதி ஆர்டர். அதுமட்டுமில்லை, பர்பஸும் இருக்கிறது. இந்த அழகிலேதான் தேனீ வசீகரமாகி வந்து தேன் குடிக்கிறது. அதற்கு ஆஹாரம் கொடுக்கிற பர்பஸுக்குள்ளேயே ரஹஸ்யமாக, அதைவிடப் பெரிய இன்னொரு பர்பஸும் ஃபுல்ஃபில் ஆகிறது. தேனீ செய்கிற மகரந்த பரிவர்த்தனையினால்தான் இந்தச் செடி இனவிருத்தி பெறுகிறது. இப்படி இதிலே ஜட வஸ்து பண்ணவேமுடியாததான ரொம்பவும் புத்தி பூர்வமான 'ட்ரிக்' வேறே இருக்கிறது. இன்னொரு வேடிக்கை கூட: ரொம்பவும் வர்ண விசித்திரமில்லாத பூவாகச் சிலது உண்டாகின்றன; அவை தேனீயை ஆகர்ஷணம் பண்ணுவதற்காக ஏகப்பட்ட வாஸனையை வைத்துக் கொண்டிருக்கின்றன.

ஸுகந்தம் நிறைய இருக்கிற மல்லிகை, மகிழ், சம்பங்கி, மனோரஞ்சிதம் மாதிரிப் புஷ்பங்களில் 'கலர் விசித்திரம்' இல்லை. கலர் விசித்திரம் நிறைய இருக்கும் கனகாம்பரம், துலுக்க சாமந்தி, பூ வகைகள் முதலியவற்றில் வாஸனை இல்லை. தேனீயை இழுக்க ஏதோ ஒரு ட்ரிக் போதும், இரண்டும் வேண்டாம் என்று இதிலே ஒரு எகானமி (சிக்கனம்) வேறே! (ரோஜா மட்டும் விதிவிலக்கு) ஜட வஸ்து இப்படி யெல்லாம் கெட்டிக்கார ப்ளான் போட்டு அதன் பிரகாரம் பண்ண முடியுமோ? இன்னொரு வேடிக்கை கூட! நேச்சர் — இயற்கை—என்று சொல்வதில் நிறைய 'வெரைய்டி' நுணுக்கி நுணுக்கமாகப் பார்க்க வேண்டும் என்கிற காரிய புத்தி யதேஷ்டமாகத் தெரிகிறது. வாஸனைப் பூ — கலர்ப் பூ வித்யாஸம் போலவே கார்த்தாலே பூக்கிறது — ராத்திரி பூக்கிறது என்று ஒரு வித்யாஸம். இதிலே ராத்திரி பூக்கிறதுதான் அந்த வேளையில் கண்ணுக்குத் தெரியும்படியாக வெள்ளை வெளேரென்று மல்லிகை ஜாதிகள், பன்னீர்ப்பூ, ராமபாணம் என்கிற நில சம்பங்கி, இப்படி இருக்கின்றன.

தாவர இனத்தில் இன்னொரு வர்க்கமான பழ மரத்தில் மநுஷ்யனுக்கு ருசியான பழம் கிடைக்கிறது. இது ஒரு பர்பஸ். இதற்குள் திரிசமனாக இன்னொரு பர்பஸ். இதே மாதிரிப் பழம் பின் சந்ததிக்கும் கிடைக்க வேண்டும் என்ற ஸ்வய ஸம்பந்த லாபத்துக்காகப் பழத்துக்குள் இருக்கிற கொட்டையை நடுகிறோம்; இதிலேயே அந்த மரம் தன் ஸந்ததியை விருத்தி பண்ணிக்கொள்கிற அதன் ஸ்வய லாபமான பெரிய பர்பஸும் ஃபுல்ஃபில் ஆகிறது.

இப்படி ஆலோசித்துப் பார்த்ததில் என்ன தெரிகிறது? ''ஜட வஸ்து தானாக ஒழுங்கை (Order) நோக்கத்தை (Purpose) ஏற்படுத்திக்கொள்ள முடியாது; அதனால் மரத்தை மனையாகப் பண்ண ஒரு தச்சன் இருக்க வேண்டும்'' என்ற நம்முடைய Premisesஐ (அடிப்படைக் கொள்கை) படியே, அந்த மரத்தைப் பண்ணவும் ஒரு மஹா பெரிய தச்சன் இருந்தாக வேண்டும் என்று தெரிகிறது. நாம் பண்ணுவதை விட இன்னும் பெரிய ஆர்டரோடு, இன்னம் பெரிய பர்பஸ்களுக்காக இந்த மரம் இருக்கிறதால், நம்மை விட மஹா கெட்டிக்காரனான தச்சன் அவன் என்றும் தெரிகிறது. நாம் செய்கிறதை யெல்லாம் அப்பட்டமாகக் காட்டி, டெமான்ஸ்ட்ரேட் பண்ணுகிறோமென்றால் நம்மை விடப் பரமாற்புதங்களைப் பண்ணும் அவனோ இத்தனையையும் பரம ரஹஸ்யமாகப் பண்ணித் தன்னுடைய ஸூக்ஷ்மமான ரஸாநுபவத்தைக் காட்டுவதோடு, தன்னையே ஒளித்துக் கொண்டு நம்முடைய கெட்டிக்காரத் தனத்தை யெல்லாம் அசட்டுத்தனமாக்கி விடுகிறான்! மநுஷ்யன் தின்னாத வேப்பம் பழம் என்றால் அதைத் தின்ன ஒரு காக்கா ஜாதியை அதோடு பிணைக்கிறான். அந்தக் காக்கா மநுஷ்யனைப் போலக் கொட்டையை நட்டு அந்த விருக்ஷத்தின்* இன விருத்தியைச் செய்யாது என்பதால் அது எச்சமிட்டே கொட்டை வேறே இடத்தில் (இந்த மரத்தின் நிழலில் வாடாமலிருப்பதற்காக வேறே இடத்தில்) முளைக்கும்படி பண்ணுகிறான். நாம் வெளியே விடுகிற 'கார்பன்-டை-ஆக்ஸைடை' மரம் உள்ளே இழுத்துக் கொள்வது; அது பதிலுக்குத் தருகிற தித்திப்புப் பழத்தை நாம் சாப்பிடுவது; அதையே நாம் மறுபடி எருவாக மாற்றி அதற்குத் தருவது என்றிப்படிப் பல இனங்களை, ஜீவ-ஜடங்களை, ஒன்றுக்கொன்று உபயோகமாகக் கோத்து வைத்திருக்கிறான்.

இப்படியே எண்ணி முடியாத மர வர்க்கங்கள், மலைகள், ஸமுத்ரங்கள், லோகங்கள், நக்ஷத்திரங்கள், க்ரஹங்கள் எல்லாமும் அதி யாச்சரியமான ஒழுங்கோடு, ஒன்றுக்கொன்று பின்னிப் பிணைந்து ஏராளமான உத்தேசங்களைப் பூர்த்தி பண்ணிக் கொண்டிருப்பதை நினைத்துப் பார்த்தால், இயற்கை, இயற்கை என்று ஜடமாகச் சொல்லப்படுவது ஜீவ சைதன்யமான ஈச்வர லீலைதான் என்று எப்படித் தெரியாமல் போகும்?

*(ஸம்பாஷணையில் கூறியருளியது.)*

---

1942 ஆகஸ்ட் 8ம் நாள். மகாத்மா, நேரு, பட்டேல் முதலிய பெருந் தலைவர்களை வெள்ளை அரசாங்கம் சிறையில் அடைத்ததால் நாடெங்கும் பெருங் கொந்தளிப்பு.

திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் மாணவர்கள் செப்டம்பர் பரீட்சையை ஒத்தி வைக்கும்படி போராட்டம் நடத்திக் கொண்டிருந்தோம். எங்களைச் சமாதானப்படுத்த மாலை ஒரு கூட்டத்துக்கு முதல்வர் ராவ் சாகிப் அலெக்சான்டர் ஞானமுத்து ஏற்பாடு செய்தார். பல பேராசிரியர்கள் பிரசங்கம் செய்தனர். நாங்களோ தேர்வு எழுதச் சம்மதிக்க மாட்டோம் என்று கோஷித்துக்கொண்டிருந்தோம். பேராசிரியர்களின் பேச்சு எடுபடவில்லை.

அடுத்து எங்களது பெரு மதிப்புக்குரிய ஆங்கிலப் பேராசிரியர் அ. சீநிவாச ராகவன் எழுந்தார். ''மார்க் அந்தோனியே! உட்கார்! வராதே! பேசாதே!'' என்று நாங்கள் கத்தினோம்.

தமக்கே உரிய புன்னகையுடன் அவர் பேச ஆரம்பித்தார். ''என் இத்தனை ஆண்டு வாழ்வில் என் குழந்தைகள் என்னைப் பேசாதே என்று தடுத்தது இதுதான் முதல் தடவை. பரவாயில்லை. தேசத்துக்கு ஆற்ற வேண்டிய கடமையில் கல்வியும் ஒன்று!'' - தர்க்க ரீதியாக, அழகாக, ஆணித்தரமாக கவர்ச்சியாக, உருக்கமாக இனிமையான ஆங்கிலத்தில் பேசினார். ...பேசினார்... பேசிக் கொண்டே போனார்.

இறுதியில் காரியப் பிரகாரம் மார்க் அந்தோனிதான் வென்றார்!

-மணியரசு சி. திருநாவுக்கரசு



# மனமிருந்தால் வழியுண்டு





கோலாலம்பூருக்கு 1977ல் நான் சென்றிருந்தபொழுது அதற்கு மையம் போல் விளங்கும் பாங்குகள் கேந்திரத்தில் 'டிராஃபிக் ஜாம்' வெகு சகஜம். அதாவது பம்பாயில் அந்தேரிப் பகுதியிலிருந்து கோட்டைப் பகுதிக்கு வருவதைப் போல. இன்று கோலாலம்பூரில் வண்டிகள் மணிக்கு 60 மைல் வேகத்தில் ஜனப் புழக்கப் பகுதியில் பறக்கின்றன; பறந்தாக வேண்டும். சாலைகள் புனரமைப்பு அப்படி. பம்பாயில் ப்ளோரா பௌண்டன் பகுதியிலிருந்து ஜவுளி கேந்திரத்துக்குச் செல்ல இன்றும் அரைமணி ஆகிறது. தூரம் இரண்டு மைல்கள் கூட இல்லை.



மலேசியாவில் அபிவிருத்தி மேம்பாட்டுத் திட்டங்களை வகுப்பதற்கு முன் பலத்த விவாதங்கள் ஏற்படும். ஆனால் திட்டங்கள் இறுதியான பிறகு அடுத்தபடி போடு போடு என்ற செயல்பாடு. ''என் டையில் போடு போடு இல்லை'', கெடுபிடியான, துரிதமான வேகம்.

இன்று மலேசியாவில் ஜப்பான் ஒரு குட்டி ஜப்பானையே உருவாக்கியுள்ளது. கார்கள் என்றால் ரோடுகளைக் கவ்விக் கொண்டு துளி கூட ஆட்டம் இல்லாத அற்புத டோயோடா டாட்ஸன், மஜ்தா வண்டிகள். உலகமெங்கும் தன் உயர்ந்த தொழில் நுணுக்கத்தை ஸ்தாபித்த நேஷனல், ஸோனி ரேடியோக்கள், படப் பதிவுக் கருவிகள். Be Malaysian) Buy Malaysian என்று யாரும் அறிவுரை வழங்குவதில்லை. இன்று மோஸ்தர் கலர் டெலிவிஷன். இங்கும் ஷார்ப் ஒஸ்தியா அல்லது ஹிட்டாச்சி ஒஸ்தியா என்பது கேள்வியே தவிர தட்டுப்பாடு கிடையாது. சுதந்திரமான வியாபாரம்.

இன்று ஜாலான் அம்மாங்கில் (அதாவது ஜாலான் தெருவில்) தமிழர்கள் கைவைத்த பனியன்களுடன் வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு பழைய மோஸ்தரில் வியாபாரம் செய்கிறார்கள். ஆனால் ஜப்பானிலும் சிங்கப்பூரிலும் உள்ளது போன்ற சிறப்பங்காடி சங்கிலிகள் ஜப்பானிய நிறுவனங்களால் ஏற்படுத்தப்பட்டு வியாபாரம் சக்கைப் போடு.

இந்தியர்கள் நடத்தும் அடுக்கு மாளிகைக் கடைகளும் உண்டு. அமெரிக்க மோஸ்தரில் பெண்களை டஜன் கணக்கில் அமர்த்திப் பணத்தை அள்ளுகிறார்கள். எந்தத் துணிக் கடையிலும் ஜே ஜே என்ற கூட்டம். சாமான்கள் வாங்க வருபவர்கள் இந்தப் பாவாடை சட்டை நாகரிகம் போதும் என்று உடம்போடு ஒட்டிக் கொள்ளும் சட்டைகளையும் ஸ்கர்ட்களையும் ஜீன்ஸ்களையும் அணிகின்றனர்.

மலாசியாவில் இஸ்லாம் பெரிய மதம் என்றாலும் இங்கு பரந்த மனப்பான்மை நிலவுவதால் எப்படி பெண்கள் வெளியே வரலாம், எப்படி அவர்கள் உடைகள் அணியலாம் என்பது பிரச்சினை அல்ல.

மலாசியாவை ''திறந்துவிட'' (Open up) வடக்கேயிருந்து தெற்கே விரைவு நெடுஞ்சாலை அமைக்கப்படுகிறது. இந்தியாவில் உள்ளது போல் தொன்மைக்கு நெய் ஆதாரமா அல்லது வெற்றிகர செயல்பாட்டுக்கு ''ஸம் திங்'' அவசியமா என்ற கேள்விகள் கேட்கப்படுவதில்லை.

இதையெல்லாம் பார்த்த எனக்கு இந்தியாவின் ஜாதகத்தில் நிரந்தரமாக ஏழரை நாட்டுச் சனி பிடித்திருக்கிறதோ என்று தோன்றிற்று. ஹிந்தி, உலகில் எப்படிப் பரப்பப்படுகிறது என்று பார்க்க வந்த பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் என்ன கற்றுக்கொண்டார்களோ என்னவோ, ஏற்கனவே தெரிந்தது அவர்கள் தலா எடுத்துத் திரும்பிய சாமான்கள் எடை 60 கிலோ. இதில் உள்ளடக்கம் 'விடியோ' என்ற டெலிவிஷன் நிகழ்ச்சிகளைப் பதிவு செய்யும் கருவிகள். இவை இந்தியாவில் தடை செய்யப்பட்டவை — அதாவது உங்களுக்கும் எனக்கும்.

கே. ஸ்ரீனிவாசன்







007 பாலு
கதை: குமரன்
படம்: விஜு
14










இதற்கிடையில்... மோடியுடைய ஃபிளாட்டில், சிறை இருந்த அறையிலிருந்து வராந்தாவுக்குப் பத்திரமாக வந்து சேர்ந்துவிட்ட பாலு....
அலேக்! முதல் கட்டம் வெற்றி. அடுத்ததாக ஃபிளாட்டுக்குள்ளே போய் ஆராய வேண்டியதுதான்.....


இந்த அறையில் ரகசியம் ஒன்றும் இருப்பதாகத் தோன்றவில்லை... ...அடேயப்பா! எத்தனை பெரிய ஃபிளாட்!


இங்கேயும் சந்தேகிக்கும்படியாக ஒன்றையும் காணோம்... ஒண்டிக் கட்டைக்கு எத்தனை அறைகள்! எவ்வளவு வசதிகள்!


ஆ! இது அவன் காரியாலய அறை! ... நல்ல வேளை யாருமில்லே! இங்கேதான் தேடிப்பார்க்கணும் ... என் அதிர்ஷ்டம் சாவிக்கொத்து அலமாரியிலேயே தொங்குது!


இரும்பு பீரோவைத் திறந்து பார்த்த பாலு....
ஆ! அடுக்கடுக்காய் நோட்டுக்கட்டுகள்.. தங்கப் பாளங்கள்.. இதோ, மோடியுடைய ஒற்றர் படையின் முழுப் பட்டியல்...
இந்த அறையை
இங்கே ஒரு பகல் கொள்ளை நடக்கும்னு நான் எதிர் பார்க்கலே!
தொடரும்

காசுசெய்யாத காரியத்தை கொசுவர்த்திச் சுருள் செய்யும்!

டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்









கொசுத் தொல்லையற்ற நிம்மதியான தூக்கத் திட்டத்திற்கு உதவுவது

டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்





கொசுக் கூட்டத்தை அடக்குவதற்கு

டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
::போர்ட், பம்பாய்-400 023. ::போன்: 273831

## வட்டமேஜை

● கி. கஸ்தூரி ரங்கனின் ''சஞ்சய்'' கட்டுரையைப் பாராட்டதவர்கள் இருக்க முடியாது. பிரதமர் மகன் என்பதற்காக 'ஓகோ' என்று தூக்கி வைக்காமல், சாட வேண்டிய இடத்தில் சாடி; புகழ வேண்டிய இடத்தில் மனமாரப் புகழ்ந்து அற்புதமாக எழுதியுள்ளார்.

திருச்சி-5 ''ராஜேஸ்வரி''

● சஞ்சை வாழ்க்கை வரலாறு மட்டுமல்ல அரசியல் நாட்குறிப்பும் கூட.

சேரகுளம் ச.ச. சிவாயசிவசுந்தரம்

● பலர் 'கஸ்தூரிரங்கனை இரண்டாவது மத்தாய்'' என்று கூறலாம். ஆனால் இறந்து போன ஒரே காரணத்துக்காக ஒரு நபரின் அரசியல் அட்டகாசங்களை எழுதக் கூடாது என்றால் இந்த நாட்டில் உண்மைச் சரித்திரம் மறைந்து சரித்திர நாவல்கள் மட்டுமே மிஞ்சும்.

சிதம்பரம் சிவ. ராஜகுமார்

● ''இந்திராவும் சஞ்சயும் தேசத்தைக் குடும்பச் சொத்தாக நினைத்துச் செயல்படுவதை மறுத்தாலும், நேருவின் குடும்பம் தேசத்தின் மாபெரும் சொத்து என்பதை மறுப்பதற்கில்லை.'' என்ற வரிகள் என்னைக் கண்கலங்க வைத்து விட்டன. என்னைற்ற இளைஞர்கள் இதனை உணர வேண்டிய தருணமிது.

கும்பகோணம் ஆர். கிருஷ்ணன்

● ''நேருவின் குடும்பம் இந்தியாவின் சொத்து'' என்று கூறி முடித்திருப்பதைக் கடுமையாக ஆட்சேபிக்கிறோம். காந்தியடிகளின் சேவையும், பட்டேலின் வீரமும் வ.உ.சி.யின் தியாகமும் நமது மகத்தான ஜனநாயக அமைப்புக்களும் இந்து கலாச்சாரமும்தான் இந்த நாட்டின் சொத்தே தவிர 'ஒரு குடும்பத்தை' இந்த நாட்டின் சொத்தாக ஏற்றுக் கொள்வதா?

சிதம்பரம் சிவ. ராஜகுமார்

● சஞ்சய் வரலாறு எழுதிய கி. கஸ்தூரி ரங்கன் கத்தி மேல்தான் நடந்தார்.

சஞ்சய் காந்தியை ஒப்புக்குப் பாராட்டி அவர் எழுதிய வாக்கியங்களை நீக்கிவிட்டுத் தொகுத்து வைத்துள்ளேன்.

திருச்சி என். பானு

● ஆபாசத்தின் மூலமே பெரும்பாலான இளைய தலைமுறையினரைக் கவர்ந்து அதன் வழி வருமானத்தை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்று கொள்கையாக நினைத்துச் செயல்படும் எழுத்தாளர்கள், ஓவியர்கள், இவர்களை ஊக்குவிக்கும் பத்திரிகை உலகம். இந்நிலை கண்டு வெம்பும் நல்லிதயங்கள். அகிலனின் கருத்து ஆயிரக் கணக்கான நல்லோர்களின் உள்ளப்பிரதிபலிப்பேயாகும். அவரது கருத்து வரவேற்கப்பட வேண்டியதே அன்றி நிராகரிக்கப்பட வேண்டியது அல்ல.

தஞ்சை என். வி. சுப்பராமன்

● பத்திரிகைகளில் வெளியிடப்படும் விஷயங்களை அரசு கட்டுப்படுத்தலாம் என்கிறார் அகிலன். அப்படிச் செய்வதும் பத்திரிகைத் தணிக்கை முறையை அமுல்படுத்துவதும் ஒன்றுதான்! அத்தகைய வாய்ப்பு அரசுக்குத் தரப்பட்டால், ஆட்சியாளர்கள் தங்கள் மனம் போல் பத்திரிகைகளை ஆட்டிப் படைக்க வாய்ப்பு ஏற்பட்டு விடும். அப்புறம் ஜனநாயகம் என்பதற்கும் எழுத்துச் சுதந்திரம் என்பதற்கும் அர்த்தமே இல்லாமல் போய்விடுமே?

கெங்கவல்லி கி. முருகவேள்

● ''ஆபத்தான யோசனை'' தலையங்கம் வெகு அருமை. இப்போதாவது மனமுவந்து பிரதமரைப் பாராட்டினீர்களே!

ஈரோடு என். கல்யாணி

● தமிழன் சிவாஜி தன்னடக்கத்தோடு நடந்து கொண்டார். முகமது அலி ஒரு ''கும்'' விட்டாரானால் உமது சகாப்தம் முடிந்து விடும்.

ஒரு-போட்டியில் தோல்வி பெற்றதாலோ ஒரு படம் தோல்வி அடைவதாலோ சகாப்தம் முடிந்து விடாது.

திருநெல்வேலி ப. தமிழ்மணி

● சிவாஜி உட்பட 'உடம்புக்கேற்ற வேஷத்தை 'வயதுக்கேற்ற வேஷம்' என்று புரிந்து கொண்டிருக்கிறார்கள். வயது ஒரு பிரச்னையே அல்ல. உருவம்தான்.

திருநெல்வேலி எஸ். ராமநாதன்

● கோமல் சுவாமிநாதனின் புதிய நாடகத்துக்குத் தடை விதித்தது பற்றி 'தண்ணீருக்குத் தடை.' என்ற தலைப்பில் ஒவ்வொரு பத்திரிகையாளரும் ஒவ்வொரு வாரம் எழுத வேண்டும் என்று உங்களுக்குள் தீர்மானம் போட்டுக் கொண்டீர்களா?

600035 சி. பூபால் சிங்

● நாராயணசாமி நாயுடு பற்றிய கார்ட்டூனைக் கண்டு வருத்தமுற்றேன். 'எதற்கெடுத்தாலும் கிளர்ச்சி செய்கிற நபர்' என்று நாயுடு அவர்களைப் பற்றிப் பொதுவான அபிப்பிராயத்தை ஏற்படுத்த தமிழக அரசுதான் முயல்கிறது என்றால் தாங்களும் அதற்குத் துணை போக வேண்டுமா?

கிளர்ச்சி செய்தால்தான் கவனிப்பது, இல்லாவிட்டால் தெரியாதது மாதிரி இருக்கிற போக்காக அரசும் அதிகாரிகளும் நடந்து கொண்டால் அது கிளர்ச்சியாளர்களின் குற்றமாகாது.

அந்தியூர் மு. தவசியப்பன்

## அத்தியாயம் 66

# ஒரு கல்லில் இரண்டு மாங்காய்

வேடன் விடுதியிலிருந்து வெளிவந்தவனைக் கண்டதும் எந்த வித வியப்பையும் காட்டாத இந்திரஜித் அனந்த் காலதாமதமின்றி உரையாடலில் இறங்கினான். "நீ எப்பொழுது வந்தாய்?" என்று எடுத்த எடுப்பிலேயே கேட்டான்.

துலாஜி ஆங்கரேயின் முகத்தில் சந்தோஷத்தின் சாயை விரிந்தது. "நீ எதிர்பார்த்தபடி. மாலையில்..." என்றான் துலாஜி. அத்துடன், "பேச இது இடமில்லை. அங்கு செல்வோம்" என்று கூறிச் சற்று எட்ட இருந்த மரத்தடிக்கு அழைத்துச் சென்றான் அனந்தை.

மரத்தடியில் உட்கார்ந்ததும் துலாஜியே பேச்சைத் துவங்கி "வேடன் விடுதியில் வேறு விருந்தினர்களும் இருக்கிறார்கள்" என்று குறிப்பிட்டான்.

அவன் சொற்களில் இருந்த ஒலியைக் கண்ட அனந்த் "துலாஜி! நீ ஏதோ சொல்லத் துடிக்கிறாய் என்று தெரிகிறது. சொல்லிவிடு" என்று ஊக்கினான்.

"விருந்தினர்கள் உன் ஆதி நண்பர்கள்" என்றான் துலாஜி.

"ஆதி நண்பர்களா?" அனந்தின் கேள்வியில் வியப்பு தாண்டவமாடியது.

"ஆம்."

"யாரவர்கள்?"

"மேஜர் ஸ்டாண்டன், லெப்டினன்ட் ஸ்மித்."

இதைக் கேட்டதும் அதிர்ச்சியையோ வியப்பையோ அனந்த் காட்டுவான் என்று துலாஜியும் எதிர்பார்க்கவில்லை. அனந்தும் அந்த உணர்ச்சிகளைக் காட்டவில்லை. "அவர்கள் எனக்கு எப்படி ஆதி நண்பர்கள்? உன்னைச் சந்தித்த பின்புதானே அவர்களைச் சந்தித்தேன்?" என்று வினவினான் அனந்த்.

"சிந்துதுர்க்க நாடகத்தின் ஆதி நண்பர்கள் என்று சொன்னேன். முடிவிலும் அவர்கள் தலைகாட்ட வேண்டியது அவசியமல்லவா? அப்பொழுதுதானே நாடகம் பூர்த்தியாகும்?" என்று வினவினான் துலாஜி.

இதைக் கேட்டதும் அனந்த் லேசாக வாய்விட்டே நகைத்தான். "நீ இப்பொழுது காளிதாஸனாகி விட்டாய். நல்ல நாடகங்களை முறைப்படி சிருஷ்டிக்கிறாய்" என்றும் சொன்னான் நகைப்பின் ஊடே.

"அந்தப் பெருமை உன்னைத்தான் சாரும். இந்த நாடகத்தை வகுத்ததும் நானல்ல, சதுரங்கக் காய்களைப் போல் மனிதர்களையும் மரக்கலங்களையும் நகர்த்துவதும் நானல்ல" என்ற துலாஜி ஆங்கரே "நாடக ஆசிரியரே! அடுத்து நான் என்ன செய்ய வேண்டும்? மாக்ரேயை எங்கு சந்திப்பதாக உத்தேசம்?" என்று வினவினான்.

"பூர்ணகட்டில்" என்றான் அனந்த் தாமதமின்றி.

துலாஜி சிறிது நேரம்தான் சிந்தித்தான். "சரி சரி காரணம் புரிகிறது" என்றான்.

"என்ன புரிகிறது?" அனந்தின் கேள்வியில் சற்றே வியப்பு ஒலித்தது.

"அரபிக் கடலைச் சூறையாடி வரும் வெள்ளைக் கொள்ளைக்காரர்களை ஒழித்துக் கட்டுவதாக வாக்குக் கொடுத்தாய் பேஷ்வாவுக்கு. அதில் என் தந்தையையும் மெல்லச்சேர்த்து விட்டாய். உன்திட்டம் கொள்ளைக்காரர்களை அழிக்கும் திட்டமானால் அதற்கு இப்பொழுது சமயம் சரியாயிருக்கிறது."

"எப்படி?"

"நீ துறைமுகத்துக்குள் கடல்ராணியைச் செலுத்துவதைக் கவனித்தேன்."

"உம்."

"அடுத்து காஸண்ட்ரா துறைமுக வாயிலை அடைத்து விட்டதையும் கவனித்தேன்."

"உம்."

"காஸண்ட்ராவுக்குப் பின்னால் சிறிது தூரத்தில் விளக்குகளை அணைத்துக்கொண்டு கடல் ராணியின் துணைக் கப்பல்கள் ஐந்து நிற்பதையும் பார்த்தேன்."

"அவ்வளவுதானா?"

"இல்லை. நீ ராணியுடனும் சாருவுடனும் கோட்டைக்கு வந்ததையும் பார்த்தேன். இத்தனையையும் பார்த்தேன். பார்க்காததை ஊகித்தேன்" என்று துலாஜி புன்முறுவலை இதழ்களில் படர விட்டுக் கொண்டான்.

அனந்தும் புன்முறுவல் செய்தான். "எதை ஊகித்தாய்?" என்று வினவினான்.

"மந்தாரை மரங்களால் மறைக்கப்பட்டிருக்கும் கோட்டை பீரங்கிகளையும் நீ கண்டிப்பாய், பார்த்திருப்பாய். உன் ஏற்பாடுகள் அத்துடன் பூர்த்தி" என்ற துலாஜி மேலும் சொன்னான்: "காஸண்ட்ரா எத்

கடல்ராணி

சாண்டில்யன்

தனே பீரங்கிகளைக் கொண்டதாக இருந்தாலும் அது உன்னிடம் இப்பொழுது சிறைப் பட்டிருக்கிறது. அது பீரங்கிகளை இயக்கத் முற்பட்டால் கிழக்குப்புற மிருந்து கடல் ராணியின் பீரங்கிகளை லிவானியர் இயக்குவான். காஸண்ட்ராவுக்கு அப்பாலுள்ள மேல் திசையிலிருந்து ஐந்து துணைக் கப்பல்களும் அர்த்த சந்திர வட்டமாக வளைந்து பீரங்கிகளால் காஸண்ட்ராவைத் தாக்கும். போதாக் குறைக்கு மலை மீதிருக்கும் கோட்டையில் உள்ள பீரங்கிகள் காஸண்ட்ராவை நோக்கிக் கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் காஸண்ட்ராவை விட இன்னும் பெரிய கப்பலாயிருந்தாலும் அழிந்துவிடும். கொள்ளைக்காரர்களை அழிப்பதாயிருந்தால், டெய்லரையும் இங்க்லண்டையும் சிறைப்படுத்துவதாயிருந்தால், இதுதான் சமயம். தவிர இங்க்லண்ட் ஏற்கனவே கடல் ராணியில் இருக்கிறான். கொள்ளைக்காரர்களில் சிறிது நிதானஸ்தனும் புத்திசாலியும் அவன்தான். அவன் உன்னிடம் அகப்பட்டிருக்கும்போது டெய்லரைப் பிடிப்பதோ காஸண்ட்ராவை அழிப்பதோ ஒரு பெரிய காரியமல்ல.''

''துலாஜி! என் மனத்தை இப்படிப் புரிந்து கொள்ளக் கூடியவன் நீ ஒருவன் தான். ஆனால் நாம் இப்பொழுது காஸண்ட்ராவைத் தாக்குவதற்கில்லை'' என்றான் அனந்த்.

''ஏன்?'' துலாஜியின் கேள்வியில் மர்மத்தின் ஒலி தெரிந்தது.

அதை அனந்த் கவனிக்கவே செய்ததால், ''உனக்கே தெரியும் காரணம். இருந்தாலும் சொல்கிறேன். நாமிருவரும் முதலில் புறப்பட்டபோது சமாளிக்க வேண்டியவர்கள் டெய்லர், இங்க்லண்ட் இருவர் தான் இருந்தார்கள். இப்பொழுது மாக்ரேயும் சேர்ந்து கொண்டான்'' என்று குறிப்பிட்டான்.

''மாக்ரே உனது நண்பன். அவனுடன் ஒப்பந்தமாகியிருக்கிறதே. விஜய துர்க்கத்தில் தான் அது தீர்மானமாயிற்றே'' என்றான் துலாஜி.

''உண்மைதான். நட்புரிமை இங்க்லண்ட்



டெய்லர் இருவரைப் பற்றியது. ஆனால் மாக்ரேக்காக நாம் காஸண்ட்ராவை அழித்து விட்டால் கொள்ளைக்காரரை ஒடுக்கலாம், ஆனால் பிரிட்டிஷ் பலத்தை ஒடுக்க முடியாது. அது இன்னும் பெருகும். ஆகையால் நாம் அதையும் ஒடுக்க வேண்டும். அதனால்தான் பூர்ணகட்டை இந்தப் போருக்குத் தேர்ந்தெடுத்தேன். துறைமுகம் அங்கு சரியில்லை. மத்ஸ்யகந்தி நதி முரடானது. அதற்குள் கப்பலைச் செலுத்தவும் முடியாது. ஆகையால் போர் நடுக் கடலில் நடக்கும். போர் நமக்கும் காஸண்ட்ராவுக்கும் அல்ல. மாக்ரேக்கும் காஸண்ட்ராவுக்கும். தன்னைக் கண்டதும் மாக்ரே ஓட முயற்சி செய்வான், தூரத்தி ஒழித்துவிடலாம், அவன் கொண்டு வருவதாக நீ ஏற்கனவே ஆசை காட்டியிருக்கும் இரண்டு லட்சத்துக்கும் மேற்பட்ட மோகராக்களையும் ரத்னங்களையும் வைரங்களையும் விழுங்கி விடலாம் என்று டெய்லர் கனவு காண்கிறான். இம்முறை வரும் மாக்ரே பழைய மாக்ரேயல்ல. தன்னை விட்டு ஓடும் துணைக் கப்பல்களுடன் மாக்ரே வரவில்லை. கப்பற் படையுடன் வருகிறான். அவன் நெஞ்சத்தில் வஞ்சம் இருக்கிறது. டெய்லர் புது மாக்ரேயை இந்தப் போரில் காண்பான்'' என்று விளக்கினான் அனந்த்.

புரிந்து கொண்டதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் துலாஜி. ''அரபிக் கடல் இதுவரை காணாத அற்புதத்தைக் காணப் போகிறது'' என்று துலாஜி குதூகலத்துடன் சொன்னான். ''அது மட்டுமல்ல ஒரே கல்லில் இரண்டு மாங்காயை அடிக்கப் பார்க்கிறாய். இதில் கொள்ளையர் பலம் பிரிட்டிஷ் பலம் இரண்டும் உடைந்து போகும்'' என்றும் கூறினான்.

அனந்த் ஏதும் பேசவில்லை. தீவிர சிந்தனைக்குப் பிறகு கேட்டான், ''உனது நண்பர்கள் இருவரையும் என்ன செய்யப் போகிறாய்?'' என்று.

''இப்பொழுது அவர்கள் எனது நண்பர்களாகி விட்டார்களா?'' என்று நகைத்தான் துலாஜி.

''உன்னுடன்தானே தங்கியிருக்கிறார்கள்?''

''ஆம், ஆம். அதே விடுதியில்.''

''என்ன வேவு பார்ப்பதற்கு?''

''ஆம்.''

''அவர்களுக்கு வேண்டியதை நீயே சொல்லிவிடு.''

''சரி. என்னுடன் அழைத்துப் போய் விடுகிறேன். ஆனால் நீ என்னுடன் வந்து என் அறையில் சிறிது நேரம் பேசிவிட்டுப் போ.''

''சரி வா'' என்று கூறிய அனந்த் துலாஜியுடன் வேடன் விடுதியில் உள்ள அவனது அறைக்குச் சென்றான். நீண்ட நேரம் அவனுடன் பேசிக் கொண்டிருந்து விட்டு வெளியில் வந்து ''துலாஜி! அந்த ஓலையில் திட்டம் பூராவும் இருக்கிறது. ஜாக்கிரதை'' என்று இரைந்து கூறிவிட்டுச் சென்றான்.

அவன் சென்றதும் வெளியே வந்து தனது புரவியில் ஏறிக் கொண்ட துலாஜி வடக்கு நோக்கி வேகமாகப் புரவியைத் தூண்டினான். அடுத்த விநாடி வெளியே வந்த ஸ்டாண்டனும் ஸ்மித்தும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். ''நாம் நினைத்தது சரியாகப் போய் விட்டது'' என்றான் ஸ்டாண்டன்.

''விஷயம் தெரியாமலா இங்கு வந்தோம்?'' என்றான் ஸ்மித்.

''சரி. புறப்படுவோம்'' என்றான் ஸ்டாண்டன்.

''நமக்கு இங்கு முக்கிய வேலை இருக்கிறதே?'' என்றான் ஸ்மித்.

''என்ன வேலை? திட்டத்தைப் பற்றிய ஓலையைத்தான் அவன் கொண்டு போய் விட்டானே?'' என்று ஸ்டாண்டன் சொன்னான்.

''அது சரி. ஆனால் கடல் ராணியைப் பிடிக்கத்தானே முதலில் சிந்து தூர்க்கம் வந்தோம்?'' என்று வினவினான் ஸ்மித்.

''ஆம்.'' ஸ்டாண்டனின் குரலில் அலுப்பு இருந்தது.

''அவன் இப்பொழுது அதோ அந்தக் கோட்டையில் இருக்கிறான்.'' என்று தூரத்தில் தெரிந்த தேவ்கட் கோட்டையைக் காட்டினான் ஸ்மித்.

**வம்பன் வெங்கி** — தமயந்தி

தெரியுமா உமக்கு? பாலக்காடு மணி ஐயர்....

திரும்பவும் கச்சேரிகளில் வாசிக்கப் போறாராமே?

கர்நாடக சங்கீதக்காரர்களும் அரசியல்வாதிகள் மாதிரி ஆயிட்டாங்க போலிருக்கு ......

# ராக்கெட் ராணி

வெறும் தமிழ்ப் படங்களை அறுக்கையில் மொழிமாற்றி வேறு சோதிக்கிறார்கள். ரேஷ்ணுவும், விஜயலலிதாவும் நிறைய சண்டை போடுகிறார்கள். ஜோதிலட்சுமியும், ஜெயலலும் மாறி மாறி ஆடுகிறார்கள். வில்லன்கள் அசட்டுத்தனமாய் வழிகிறார்கள். இது போக மீதிப் படமெல்லாம் குதிரைகள் ஓடுகின்றன. கௌபாய் பாணிப் படம். சாத்தியமில்லாத கதை. சத்தில்லா நடிப்பு. பின்னணியில் அடித்து நொறுக்குகிறார்கள்.

படத்தின் நீதி:

கொலை, கொள்ளை, கற்பழிப்பு கூடாது.

— நளினி சாஸ்திரி



''அவன் மட்டுமில்லை. இன்னொருத்தியும் இருக்கிறாள்.''

''அப்படியானால் நல்லதாகப் போய்விட்டது'' என்று ஸ்மித் கோட்டையை நோக்கி நடக்கலானான்.

அவனைக் கையைப் பிடித்து நிறுத்திய ஸ்டாண்டன் ''முதலில் மாக்ரேயின் உத்தரவை நிறைவேற்றுவோம். கடல் ராணி எங்கு போய் விடுவாள்? இப்பொழுது இந்திரஜித்தின் போர்த் திட்டத்தை அறிவது முக்கியம். முதலில் துலாஜியிடமிருந்து அந்த ஓலையைப் பறிக்க வேண்டும். புறப்படு'' என்று கூறி லெப்டினன்டை அழைத்துக் கொண்டு புரவியில் ஏறி துலாஜியைத் தொடர்ந்தான்.

அனந்த் கோட்டைக்கு வரும்போது உதய மாகும் காலமாயிருந்ததால் அவன் கோட்டைக்குள் புகாமல் கடல் ராணியிலிருந்து கொண்டு வந்த படகொன்றை எடுத்துக் கொண்டு காஸண்ட்ராவை நோக்கித் தன்னந் தனியே சென்றான். அவனை டெய்லரே வரவேற்று அழைத்துச் சென்றான் தனது அறைக்கு.

இதையெல்லாம் கடல் ராணியிலிருந்து டெலஸ்கோப்பின் மூலம் பார்த்துக்கொண்டிருந்த லிவானியருக்குப் பெரும் பிரமிப்பாயிருந்தது. அடுத்து நடந்தது அதைவிட அதிகப் பிரமையை அளித்தது. சிறிது நேரம் கழித்து சங்கர்பத்துடன் வெளியே வந்த அனந்த் அவரையும் அழைத்துக் கொண்டு கோட்டைக்குச் சென்றான். டெய்லரே இருவரையும் அனுப்பி வைத்தான். டெய்லரின் முகத்தில் பெரு மகிழ்ச்சி உலாவியது. அதற்குக் காரணம் மிகுந்த அறிவாளியான லிவானியருக்கே புரியவில்லை.

அன்று பகல்வரை சிந்தனையிலிருந்த லிவானியரின் பிரமிப்பை அதிகப்படுத்த காஸண்ட்ரா நங்கூரமெடுத்து, பாய் விரித்து நகர்ந்தது வடக்கு நோக்கி.

அது நகர்ந்த சிறிது நேரத்துக்கெல்லாம் கோட்டையிலிருந்த ராணி, சாரு, சங்கர்பத் இவர்களுடன் கடல் ராணிக்கு வந்த அனந்த் தளத்தில் நின்றிருந்த லிவானியரை நோக்கி ''காப்டன்! டெய்லர் ஈஸ் ரீஸனைபிள். ஹொய் நாட் வி ஃபாலோ ஹிம்? (டெய்லர் நியாயமாக நடக்கிறான். நாமும் அவனைத் தொடர்ந்தாலென்ன?)'' என்று வினவினான்.

''ஃபாலோ ஹொயர்? (எங்கு செல்வதற்குத் தொடர வேண்டும்?)'' என்று லிவானியர் வினவினான்.

''பூர்ணகட்.''

''எதற்கு?''

''ஒரு கல்லில் இரண்டு மாங்காய்களை அடிக்க'' என்றான் அனந்த். அவன் முகத்தில் தீவிர சிந்தனை படர்ந்து கிடந்தது.

லிவானியர் முகத்தில் அனந்தை விட சிந்தனை தீவிரமாகப் படர்ந்தது. திடீரென அந்தச் சிந்தனை மேகங்கள் அகன்றன. பெரிதாக நகைத்தான் லிவானியர். ''ஹொய் ஹால் ஐ நாட் தாட் அபௌட் இட் பிஃபோர் (நான் ஏன் இதை முன்னரே யோசிக்கவில்லை)'' என்றும் கூவினான் உற்சாகத்துடன். ''ஒரு கல்லில் இரண்டு மாங்காய்? அனந்த் மை பிரண்ட்! யூ ஆர் இன்கார்னேஷன் ஆப் த டெவில் இட்ஸெல்ப். (அனந்த்! நண்பனே! நீ சைத்தானின் முழு அவதாரம்)'' என்று கூறி உற்சாகத்துடன் மாலுமிகளை நோக்கி, ''நங்கூரத்தை எடுங்கள், காஸண்ட்ராவைத் தொடருங்கள்'' என்று இரைந்து உத்தரவுகளைப் பிறப்பித்தான். (தொடரும்)

நடிகை (டைரக்டரிடம்): சார்! உங்ககிட்டே நான் நல்ல பாத்திரம் கொடுத்தாத்தான் நடிப்பேன்னு சொன்னதைத் தப்பா புரிஞ்சுகிட்டீங்களா அல்லது வேணுமின்னேதான் இப்படி எவர்சில்வர், பித்தளை பாத்திரங்களோடு வந்து நிக்கிறீங்களா! — ஜே. எஸ்ரா சைமன்





# If your construction is to be absolutely waterproof... turn to ACCOPROOF

Accoproof. A special waterproofing admixture developed by ACC research. When added in the proportion of 1 kg. to 50 kg. of cement, it fills the pores in concrete —making it fully impermeable. Prevents leaks and seepage in roofs and walls of construction. Makes them more durable—saves on repair and maintenance costs.




**ACCOPROOF**

the waterproofing plus in good concrete

**ACC** **The Associated Cement Companies Ltd.,**
Cement Marketing Division, 121 Maharshi Karve Road, Bombay 400 020.
Branches: Ahmedabad • Bangalore • Calcutta • Indore • Kanpur • Madras • New Delhi • Patna • Secunderabad.

shilpi ACC 34/80

**நா**ன் சில மாதங்களுக்கு முன் தமிழ்நாடு திரைப்படக் கல்லூரிக்குச் சென்றேன். அங்கு மாணவ, மாணவியரின் திறமைகளை எல்லாம் பார்த்து மதிப்பெண்கள் இடும் வாய்ப்பு கிடைத்தது. இதற்காகவே பிரத்யேகமாக அழைக்கப்பட்டிருந்த நான் அங்கே சில திறமைசாலிகளைக் கண்டெடுத்தேன். நம் திரைப்படக் கல்லூரிக்கு எல்லா வசதிகளும் இருக்கிறது. ஆனால் அதில் பயின்று வருபவர்கள் எல்லோரும் திரைப்பட உலகில் பிரபலமாவதில்லை என்ற எண்ணம் கூடவே இருக்கிறது. ''நீங்கள் மாணவர்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறீர்கள்?'' என்று கேட்ட பொழுது, ''சிலரை உருவத்துக்காகவும், சிலரைத் திறமைக்காகவும் தேர்ந்தெடுக்கிறோம்'' என்று பதில் கிடைத்தது. ''திரைப்படம் என்று வரும்போது அதில் தெரிகிற உருவம் அழகாகவும், திரும்பத் திரும்பப் பார்க்கத் தூண்டுவதாகவும் இருக்க வேண்டும். அப்படி இருப்பவர்களை நாங்கள் தேர்ந்தெடுத்து நடிப்புப் பயிற்சி கொடுத்து அனுப்புகிறோம். சிலர் அவ்வளவாக உருவ அமைப்பில் இல்லாமல் இருந்தாலும் நடிப்பில் திறமையானவர்களாகத் தோன்றும்போது அவர்களுக்கு மேலும் பயிற்சி கொடுக்கிறோம். இவ்விரண்டு அம்சங்களுமே இல்லாமல் வருபவர்களை நாங்கள் நல்ல வார்த்தை சொல்லி அனுப்பி விடுகிறோம்'' என்றார்கள்.

# நிறைவான நடிப்பு குறைவான வாய்ப்பு!

திரைப்படக் கல்லூரியில் பத்மினி என்றொரு பெண். அவரை நேரில் நான் பார்க்கவில்லை. படத்தில்தான் பார்த்தேன். கிருஷ்ணகுமார் என்றொரு இளைஞர். இன்று நான் சொல்லும் இந்த வார்த்தைகளை மனத்தில் பதிய வைத்துக் கொள்ளுங்கள். நாளை அவர்கள் சிறந்த நட்சத்திரங்களாக விளங்குவர். உடலமைப்பு அவ்வளவாக இல்லை என்றாலும் நடிப்பு சிறப்பாக இருக்கிறது. படத்தில் பார்க்கும்பொழுது நம்மை அப்படியே ஆட்கொள்கிறார்கள். இவ்வளவு சிறப்பாக நடிப்பவர்கள் இந்தக் கல்லூரியில் இருப்பார்கள் என்று நான் நினைக்கவேயில்லை. அதே போல் தெலுங்கு மொழி வகுப்பில் ஒரு பெண். பெயர் எனக்கு நினைவில்லை. ஹிந்தி நடிகர் டானியைப் போல் ஒருமாணவர் மிகச் சிறப்பாக நடனமாடுகிறார். இவர்களைப் போல புதிய முகங்கள் திரை உலகில் பிரகாசிக்க வேண்டும். இருக்கிற பிரபல நட்சத்திரங்களுக்கேற்பக் கதை எழுதாமல் கதைக்கேற்ப நட்சத்திரங்களைத் தேர்ந்தெடுக்கும்போதுதான் நமக்கு நடிகர்களின் பற்றாக்குறையே புரிகிறது.

''ரஜினி காந்துடன் சேர்ந்து ஒரு பையன் படித்தான். நாகூ! ரஜினிகளை விழுங்கி ஏப்பம் விட்டுவிடுகிற அவ்வளவு திறம்பட நடித்தான். அவன் இப்போது எங்கு போனான், என்ன செய்கிறான் என்றே தெரியவில்லை'' என்று வருந்தினார் ஒருவர். ''நீங்கள் ஏன் இப்படிப்பட்டவர்களைத் திரைப்பட உலகப் பெரும் புள்ளிகளுக்குச் சிபாரிசு செய்யக் கூடாது?'' என்று அவரைக் கேட்டேன். ''ஒரு மாணவரைக் கவனித்து முடித்தால் அதற்குள் அடுத்த மாணவர் எங்கள் கவனத்தைக் கவரத் தயாராக இருக்கிறார். நாங்கள் எப்படி ஒரு மாணவரை அழைத்துக்கொண்டு ஸ்டுடியோ, ஸ்டுடியோவாக ஏறி இறங்க முடியும்? பிறகு எங்கள் வேலையை எப்படிக் கவனிப்பது?'' என்று பதில் கிடைத்தது.

அன்று நான் பிலிம் இன்ஸ்டிடியூட்டைப் பார்த்து விட்டு வந்ததிலிருந்து பத்மினி, கிருஷ்ணகுமாரைப் பற்றி போகுமிடமெல்லாம் சொல்லி வருகிறேன். பாலசந்தர் மாதிரி ஒருவரின் ஆதரவு கிட்டினால் அவர்கள் எப்படி முன்னேறுவார்கள் - தெரியுமா?

**வா**ரா வாரம் கல்கி மூலமாக உங்களுடன் நான் பேசி வந்தது எனக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. நடிப்பு, நடிப்பு, நடிப்பு என்று சதா பணியாற்றிக் கொண்டிருக்கும் போது நடுவில் மனம் திறந்து சில விஷயங்களை உங்களுடன் பகிர்ந்து கொண்டது எவ்வளவோ மன நிறைவைத் தந்திருக்கிறது. இந்தச் சிந்தனைச் சிதறல்கள், திரை உலகு பற்றி நீங்கள் ஓரளவு புரிந்து கொள்ள உதவியிருக்கும் என்றும் திரை உலகுக்கும் இப்பகுதி ஓரளவேனும் நன்மை செய்திருக்கும் என்றும் நம்புகிறேன். விடை பெறுகிறேன்.

பேட்டி : ''கலன்''



**சிந்தனைச் சிதறல்கள் - ஸ்ரீவித்யா**

# முட்டை பொரியுமுன்னே

**தி.சா. ராஜு**

"குட் ஈவினிங் ஹனி" மனைவியின் குரலைக் கேட்டு காலணியின் நாடாவை அவிழ்த்துக் கொண்டிருந்த குருபாதம் நிமிர்ந்து பார்த்தான்.

கழுத்து வரை வெட்டப்பட்ட முடி, நைலக்ஸ் சேலை, கையில்லாத ரவிக்கை, செருப்பின் வார், சேலை, கைப்பை, ப்ளவுஸ் நெற்றிப் பொட்டு எல்லாமே ஊதா நிறம்.

"குட் ஈவினிங் மை டார்லிங்", குருபாதம் புன்னகையுடன் விடையிறுத்தான்.

"இன்னிக்கு ஏதாவது கடிதம் வந்ததா?" அவனுடைய தோளைத் தடவியவாறே கேட்டாள் பஞ்சரத்தினம்.

"இன்னும் ஏதும் வரவில்லை டார்லிங். ஸெலக்ஷன் போர்டுக்குப் போய் வந்த பிறகு மெடிகலுக்கு வரும்படி தகவல் வரும்."

"இந்தச் சேலையோடு பிராக்டீஸ் செய்யறது கஷ்டமாயிருக்கு ஹனி."

"இவ்வளவுதானே, நவீன் டெய்லருக்குச் சொல்லி அனுப்புகிறேன். அவன் சல்வாரும் கம்மீசும் நான்கே நாளில் தயார் செய்து விடுவான். எத்தனை பாடம் ஆகியிருக்குது?"

"வால்ட்ஸூம், ஃபாக்ஸ்ட்ராட்டும் முடிஞ்சிருச்சி. நாளை மறுநாள் விங்ஸ் தொடங்கறாங்களாம். ஒண்ணும் அவ்வளவு கஷ்டமாயில்லே. ஏங்க, டான்ஸ் ஆடும்போது ஜோடி மாத்திக்குவாங்களாமில்லே! விளக்கையும் அணைப்பாங்களாம்!"

"அதனாலென்ன? கொஞ்ச நேரத்துக்குத்தானே!" குருபாதம் டேப் ரெக்கார்டரின் பித்தானை அழுத்தினான். லயத்துடன் கூடிய இசை பரவிற்று. இடது காலை முன்னுக்கு வைத்துக் கொண்டு கையை உயர்த்தினான்; பஞ்சரத்தினம் அருகில் வந்தாள். வலது கையால் இடுப்பை வளைத்து இடது கரத்தை அவளது தோளில் வைத்து உடலை அசைத்தான். கால் தப்படியை அளந்து வைத்தது.

டிங்டாங் - யா - டிங்டாங் - சாச்சா - சா ராம் துலாரி முட்டாக்கைச் சரிசெய்து கொண்டு புன்னகைத்தவாறே விலகிச் சென்றான். அந்த நோட் முடியும்வரை இருவரும் ஒருங்கிணைந்து ஆடினார்கள். வாசல் புறம் நிழலடித்தது. குழந்தைகள் லில்லியும் ஜார்ஜூம் நின்று கொண்டிருந்தார்கள்.

"அப்பா நானைக்கு லீவ்" ஜார்ஜ் கூவினான்.

"டாம் இடியட்". லில்லி கடிந்துகொண்டாள். "உனக்கு எத்தனை முறை சொல்வது? டாடின்னு கூப்பிடணும்" அவள் கடிந்து கொண்டாள். பிறகு மிழற்றினாள் "மம்மி"

"யெஸ் கிட்டி, மேஜை மேலே கட்லெட் இருக்குது; ரெண்டு பேரும் தின்னுட்டு ட்யூஷனுக்குப் போவணும்."

"ஹனி!"

"யெஸ், டார்லிங்!"

"இந்தத் தடவை நிச்சயம்தானே?"

"அப்படித்தான் தோணுது. இதுதான் லாஸ்ட் சான்ஸ். கடைசியாகத் தேர்வுக்கு வரவுங்களைக் கொஞ்சம் பரிவுடன் கவனிப்பதாகத்தான் சொல்லுகிறார்கள்."

"நான்கூடப் பசலிக்காவுக்கு வருவதாக நேர்ந்துக்கிட்டிருக்கேன். ஃபாதர் அந்தோணி கூடச் சொன்னார். கூரில் தேர்வுக்குப் போகு முன்பு அவர்தான் ஜபம் செய்தாராம். நீங்க நல்லதா டெரிகாட் யூனிஃபார்ம் ஒண்ணு தைச்சுக்கணும். இந்தச் சட்டை கலர் மங்கிப் போச்சு."

"ஆகட்டும் டார்லிங். உத்தரவு வந்துவிட்டால் அவுட்ஃபிட் அலவன்சே கிடைக்கும். ஜார்ஜூக்குக் கூடப் புது சூட் தெச்சிடுவேன்."

"சீக்கிரமே நல்லசேதி வரணும் மாதா.." அவள் சிலுவைக் குறி இட்டுக் கொண்டாள். அன்னையின் உருவத்துக்கு முன்னால் மெழுகு வத்தியை ஏத்தி வைத்து விட்டு மண்டியிட்டாள். "பரலோகத்திலிருக்கும் எங்கள்..."

வாயிற்புறம் மோட்டார் சைக்கிள் ஒலி கேட்டது. குருபாதம் எழுந்திருந்து வெளியே சென்றான். டெஸ்பாட்ச் ரைடர் முருகேசன். "என்ன முருகு?"

நீண்ட காக்கி உறை ஒன்றைத் தன் பையிலிருந்து எடுத்துக் கொடுத்தான் அவன்.

"கொஞ்சம் சாயாக் குடிச்சுட்டுப் போயேன் முருகு!"



''இல்லே. ஹவால்தார்ஜீ. பெரிய ஆள் முட்டை வாங்கிட்டு வரச் சொல்லியிருக்கான். சீக்கிரம் போவணும்!''

''ரொம்பச் சரி முருகு! என்று கையை உயர்த்தினன் ஹவில்தார் குருபாதம்.

''என்னங்க கடிதாசி?''இடைகழியிலிருந்த வாறே கேட்டாள் பஞ்சரத்தினம்.

''வர திங்கள் கிழமை அலகாபாத்துக்குப் போகணும். ஸெலக்ஷன் போர்டுலே நாலு நாள். அதற்குப் பிறகு மெடிகளிருக்கலாம்.''

''அங்கே வெய்யில் அதிகமாச்சுங்களே!''

''வெய்யிலைத் தாங்கிக்குவேன். குளிர் தான் கஷ்டம்.''

பக்கத்து வீட்டுக்காரர்கள் எல்லாம் வந்து பாராட்டுரை வழங்கிச் சென்றார்கள். ஹவில்தார் குருபாதம் செலக்ஷன் போர்டுக்குப் போவது குறித்து எல்லோருக்கும் மகிழ்ச்சி.

தேனீரும் பிஸ்கட்டும் நிறையக் காலியாயிற்று. நல்ல வேளையாக முன்கூட்டியே பெருமளவில் பீங்கான் பாத்திரங்கள் வாங்கி வைத்திருந்தாள் பஞ்சரத்தினம்.

**"அ**ப்பா இன்னிக்கு வந்திடுவாங்க இல்லையா?'' பல் பசையை பிரஷ்ஷில் எடுத்த வாறே வினவினன் ஜார்ஜ்.

''உனக்கு எத்தினி வாட்டிச் சொல்றது ஜார்ஜ்? டாடின்னு சொல்லணும். அவர் ஆபீசராகப் போறரு. நாமெல்லாம் இனி மேல் இங்கிலீஷிலேதான் பேசணும். அண்டர்ஸ்டாண்ட்?'' அக்கர வில்லி உறுமினள்.

''ஆபீசர்னு எல்லாரும் சல்யூட் வைப்பாங்க இல்லையா? நானும் கூட வைப்பேன்.'' குதி கால்களை இணைத்துக் கொண்டு வலது கையை உயர்த்தி மடித்து நெற்றியருகில் கொண்டு போனன் ஜார்ஜ்.

''ஹை சபாஷ். அப்படியேதான். யூ ஆர். எ நைஸ் பாய்.''

**வா**சலில் ஆட்டோ ரிக்ஷா வரும் சத்தம் கேட்டது. குழந்தைகள் இருவரும் வெளியே ஓடினர்கள். பஞ்சரத்தினம் ஆவலுடன் ரேழிக்கு வந்து பார்த்தாள். கைப்பெட்டியை வாசற்படியில் வைத்துவிட்டு ரிக்ஷாவிலிருந்து பழக் கூடையை எடுக்கப் போனன் குருபாதம். மஞ்சள் வண்ணத்தில் பெரிய கொய்யாக் கனிகள்.

''அப்பா! எனக்குக் கொய்யாப் பழம்.'' ஜார்ஜ் கூடை அருகில் ஓடினன்.

''நோ வில்லி பாய். டாடின்னு கூப்பிடணும்னு எத்தினி வாட்டிச் சொல்லியிருக்கேன்.'' அவனை அடிக்கக் கையை ஓங்கினள் வில்லி.

குருபாதம் அவளைத் தடுத்தான். ''வேண்டாம் வில்லி. ஜார்ஜ் என்னை அப்படியே கூப்பிடட்டும்.'' அவனுடைய குரல் தழு தழுத்தது. தொண்டையில் ஏதோ முண்டாக எழும்பிற்று.

பஞ்சரத்தினத்துக்கு இப்போது புரிந்தது. ஒரு சிறிய வளையமடித்து விட்டு ரிக்ஷாக்காரன் திரும்பினன்.



# சுபிட்சமான எதிர்காலத்திற்கும், வாழ்க்கை வளத்திற்கும் திட்டமிட்டு இன்றே சேமிக்கத் தொடங்கிடுவீர்

வளர்ந்துவரும் தேவைகளை சமாளிப்பதற்கு வாழ்நாள் முழுவதும் போராட வேண்டியுள்ளது. உங்கள் தேவைகளை பூர்த்தி செய்வதையே நீங்கள் குறிக்கோளாக கொண்டுள்ளீர்கள். வளரும் உங்கள் கனவுகள் நனவாக மிகச் சுலபமான வழி லக்ஷ்மி விலாஸ் பாங்கில் ஒரு சேமிப்புக் கணக்கை துவக்குவதே உள்ளமதில் உருவாகும் எண்ணங்கள் நிறைவேற நீண்டகால சேமிப்பே நிரந்தர பாதுகாப்பு.

லக்ஷ்மி விலாஸ் பாங்க் உங்கள் செல்வச் செழுமைக்கு வழி கோலுவதுடன் உங்கள் நல் வாழ்விற்கும் வழி வகுக்கிறது. எங்களது ஒவ்வொரு சேமிப்புத் திட்டமும் உங்கள் வாழ்க்கை வளத்திற்காகவே ஏற்பட்டவை.

மேலும் விவரமறிய உங்கள் அருகாமையிலுள்ள எமது கிளையை அணுகுங்கள். எங்களது மானேஜர் உங்களுக்கு ஏற்ப சேமிப்புத் திட்டத்தை தேர்ந்தெடுக்க உதவி புரிவார்.



## லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் : கரூர்-639 001
நிர்வாக அலுவலகம் : சென்னை 600 086.




# லக்ஷ்மி விலாஸ் பாங்கில்.

# கல்கி நற்பணி மன்றம்

**ஆறுதல் பரிசாகத் தலா ரூ 10/- பெறும் அதிர்ஷ்டசாலிகள் ஐம்பது பேர்களைப் பற்றிய விவரங்கள் :**

1. அ. ஹாரூன் பாஷா பி.எஸ்.ஸி
பொள்ளாச்சி
தினமும் ஏழாவது படிக்கும் மாணவர்களுக்கு ஒரு மணி நேரம் கணக்கும், அறிவியலும் இலவசமாகச் சொல்லித் தருவதுண்டு.

2. கே. சத்யநாராயணன்
பெரமனூர், சேலம்
எங்கள் வீடு ரோடு ஓரத்தில் இருக்கிறது. எங்கள் வீட்டு வழியாகச் சென்ற லோடு நிரம்பிய லாரியில் தீப்பற்றி விட்டது. அது டிரைவருக்குத் தெரியாது. லாரியை நிறுத்தி அவரிடம் சொல்லி, தண்ணீர் கொடுத்துத் தீயை அணைக்க உதவி செய்தேன்.

3. எல். சுப்பிரமணியன்,
திருவல்லிக்கேணி, சென்னை-5
நான் ஒரு வயோதிகருக்கு அவருக்குத் தெரியாத தெருவை அவர் சென்றடைவதற்கு வழி காட்டினேன்.

4. க. தங்கவேலு, வேலூர்.
எங்கள் பகுதியில் 25 ஏழை மாணவர்களுக்கு இலவசப் புத்தகம் வழங்கினேன்.

5. மு. காசிவிசுவநாதன், இடையன்குடி.
ஆடி அமாவாசை காரணமாக 10.8.80ல் கோவிலுக்குச் சென்று மிகப் பெரிய கூட்டத்தை ஒழுங்குபடுத்த உதவினேன்.

6. எஸ். பசுபதி, திண்டுக்கல்
இவ்வார விடுமுறையில் சாலை ஓரங்களில் உள்ள கண்ணாடித் துண்டு, ஆணி, வாழைப் பழத் தோல்களை அப்புறப்படுத்தினேன்.

7. என். எஸ். கர்ணன், சென்னை-10.
நான் தியேட்டரில் வேலை செய்யும்போது என்னுடன் இருக்கும் நண்பனுக்கு டிக்கட் எப்படி எண்ணம் வைப்பது என்று தெரியவில்லை. அதைச் சொல்லிக் கொடுத்தேன்.

8. வி. என். நாதன், சென்னை-7.
எனது அறுபத்திரண்டாவது பிறந்த நாளில் 62 பெரு வியாதியஸ்தர்களுக்கு நல்ல பிரியாணி செய்து கொடுத்தேன்.

9. ஏ. வி. ஜானகி, கோபாலசமுத்திரம்.
மிகுந்த சிரமமான நிலையில் சிறிதளவு உணவு தயார் செய்து சாப்பிட அமர்ந்தேன். அப்பொழுது மூன்று ஐந்து வயதுக் குழந்தைகள் 'பசி' என்று கூவின. தட்டிலிருந்த உணவை அவர்களுக்குக் கொடுத்துவிட்டேன்.

10. சே. எஸ். வேங்கடாசலக் கவுண்டர்
துலுக்கப்பாறை
எனது வீட்டுக்கு வரும் வழிப்போக்கர்களுக்கு விருந்தளித்து அனுப்புவேன்.

11. என். வி. ராமமூர்த்தி, ஹைதராபாத்
சென்னையிலிருந்து வரும்போது ஒரு பெண்ணையும், அவளது தகப்பனாரையும் ரயிலில் சந்தித்துப் பேசினேன். அவர்கள் எங்கள் ஊரில் சிநேகிதர் வீட்டைக் கண்டுபிடிக்க இயலாது தவித்து எங்கள் வீட்டுக்கு வந்து தங்கினர். அந்தப் பெண்ணுக்கு இண்டர்வியூவுக்கும் பரீக்ஷைக்கும் அழைத்துச்சென்று உதவினேன்.

12. ஆர். ஸ்ரீதரன், திருக்கோடிக்காவல்.
எங்கள் ஊரில் பஸ் நிற்கும் இடத்தில் மக்களுக்குப் பயன்படும் விதமாகப்பஸ் நேர அட்டவணையைத் தயாரித்து வைத்தேன்.

13. எம். கே. ராஜ்குமார், மதுரை.
கண் தெரியாத ஒரு நபருக்குப் போக்குவரத்து மிக்க சாலையைக் கடக்க உதவி செய்தேன்.

14. டி. கே. ரங்கசாமி, பெங்களூர்.
வெளியூர்க்காரர் ஒருவருக்குக் குறிப்பிட்ட இடத்துக்குச் செல்ல வழி தெரியவில்லை. அவரை அழைத்துச் சென்று வழி காட்டினேன்.

15. ஆர். ரேவதி, வேளச்சேரி.
என் தோழியின் அக்காவுக்குப் பெரிய குடும்பம். ஏழை. வசதி யில்லாதவர்கள். அவளுக்கு இண்டர்வியூவுக்கு அழைப்பு வந்தபோது நல்ல சேலையொன்று கொடுத்து ஒத்தாசை செய்தேன்.

16. பரணி கோமதி, சென்னை-15.
வேலைக்காரிக்குக் கையெழுத்துப் போடக் கற்றுக் கொடுத்தேன்.

17. ஸ்ரீமதி ருக்மிணி வேங்கடேசன்,
நெய்வேலி.
புட்டபர்த்தி பிரசாந்தி நிலையம் வந்து பகவான் சத்திய சாயி பாபாவின் அருளுக்குக் காத்து நிற்கும் பெண் சேவார்த்திகளுக்கு நான் வழிகாட்டியாக உதவினேன்.

18. பி. கணேசன், ஏலகிரி.
பசியாய் உள்ள ஒருவருக்கு அவரது பசியைப் போக்க உணவு கொடுத்தேன்.

19. ஜெயந்தி பாபு, கோலார் தங்கவயல்.
என் சிநேகிதை திருப்பதி தரிசனத்துக்குப் பண முடையினால் தயங்கிக் கொண்டிருந்த போது பண உதவி செய்து அவர்கள் பிரார்த்தனையை நிறைவேற்றி வைத்தேன்.

20. பி. வேங்கடாசலம், காட்டூர்.
வேலையில்லாமல் தவிக்கும் இரு ஏழை இளைஞர்களுக்குத் தாற்காலிகமாக வேலை கிடைக்க உதவி செய்தேன்.

21. ஆர். பத்மினி, பெங்களூர்.
ஆல் ஆமூன் வைத்திய டிரஸ்ட்டுக்கு ரூ. 1061 நிதி சேர்த்துக் கொடுத்து ஒரு வைத்தியசாலை கட்டுவதற்கு உதவினேன்.

22. வி. ரெங்கராஜன், திருவாசல், தஞ்சை.
வசதியற்ற ஏழை மாணவனுக்கு ஒரு பேனா வாங்கிப் பரிசளித்தேன்.

23. எ. ரஞ்சன் ராயன்,
வீரபாண்டியன்பட்டினம்.
உடல்நலமற்ற வயோதிகர் ஒருவரைச் சைக்கிளில் ஏற்றிக் கொண்டு சென்று மருத்துவ மனையில் சேர்த்து மருந்து வாங்கிக் கொடுத்து உதவி செய்தேன்.

24. ஆர். மனோகரன், போடிபட்டி.
எங்கள் போடிபட்டிக் கிராமத்தில் வீடு வீடாகச் சென்று ரேஷன் கார்டு இல்லாமல் அவதிப்பட்ட 25 பேருக்கு மணியக்காரர் அத்தாட்சியுடன் இந்த மாதமே ரேஷனில் உணவுப் பண்டங்கள் வழங்க ஏற்பாடு செய்தேன்.

25. ப. வேலாயுதப்பெருமாள், மதுரை-7.
என் நண்பர் ஒருவருக்குக் கலப்புத் திருமணத்துக்குப் பெற்றோர் தடையாக இருந்த போது காதலின் மகிமையை எடுத்துரைத்துச் சம்மதிக்க வைத்தேன்.

26. ஏ. ஜோசப் ரஞ்சிர்தாஸ்,
நாகர்கோவில்.
எங்கள் தெரு இருமருங்கிலும் செடிகள் வளர்ந்து இரவில் நடப்பவர்களுக்கு இடையூறு விளைவித்தன. அவற்றை வெட்டி அப்புறப்படுத்தினேன்.

27. இ. த. யமுனா ராணி,
பருக்குத்துறை, இலங்கை.
எங்கள் ஒழுங்கையில் வசிக்கும் ஒரு பெட்டை நாய் உணவின்றி வாடியபோது அதன் பசி தீர்த்தேன்.

28. ஆ. சண்முக சுப்பிரமணியன்,
கோயமுத்தூர்.
பெண்கள் சீட்டில் அமர்ந்து எழ மறுக்கும் ஆடவர்களிடம் நயமாகப் பேசி பெண்களுக்கு இடம் தரச் செய்தேன்.

29. எஸ். ரவி, திருத்துறைப்பூண்டி.
குளத்தில் விழுந்துவிட்ட ஆறு வயதுப் பையனை நீந்திச் சென்று அவனைக் கரையேற்றினேன்.

30. கே. ரங்கநாதன், சென்னை-20.
நான் வாரத்தில் ஒரு நாள் எழும்பூர் மருத்துவ மனைக்குச் சென்று நோயாளிகளுக்குப் பிரசாதம் வழங்குவது வழக்கம்.

31. கே. ஏ. ராஜம்மாள், சேலம்.
பள்ளியில் பயிலும் ஏழைச் சிறுவர்களுக்குத் துணி வழங்கி மகிழ்ந்தேன்.

32. ஜி.—தியாகராஜன், புதுக்கோட்டை.
ஓர் ஏழைச் சிறுவனுக்கும் சிறுமிக்கும் இலவச டியூஷன் சொல்லித் தருகிறேன்.

33. கே. ஆர். ஜி. நாராயணசுவாமி,
கொமராபாளையம்.
லக்ஷ்மி நாராயணன் கோவிலுக்கு நந்தா விளக்கு ஏற்றி வைத்திருக்கிறேன்.

34. எஸ். ஜெயகுமார், புதுக்கோட்டை.
கால் பந்து விளையாட்டின்போது கையை முறித்துக்கொண்ட மாணவனுக்குப் பாடம் எழுதித் தந்தேன்.

35. ஜி.—ரகுநாதன், ஸ்ரீரங்கம்.
ஒரு வயதானவர், கால் நடக்க முடியாமல் சிரமப்பட்டார். அவரைச் சைக்கிள் ரிக்ஷாவில் ஏற்றி மருத்துவ மனைக்கு அழைத்துச் சென்றேன்.

36. பி. வேலாயுதம், சென்னை-15.
எதிர் வீட்டுக்காரருக்கு ரயில் பயணச் சீட்டு வாங்கிக் கொடுத்தேன்.

37. என். பாலு, திருச்சி.
ரிக்ஷாக்களில் பத்துச் சிறுவர்களை ஏற்றிச் செல்லும் காட்சியைக் கண்டு பொருமி இத்தகைய ஓவர் லோடிங் (பஸ்களில், ரிக்ஷாக்களில்) சட்ட மீறல்களைக் கண்டித்து ஆசிரியருக்குக் கடிதங்கள் தினப் பத்திரிகைகளுக்கு எழுதினேன்.

38. ஏ. போஸ், சென்னை-5.
குழந்தைப் பேறுக்காக அவஸ்தைப்பட்ட ஒரு பெண்மணியை டாக்ஸியில் அழைத்துச் சென்று மருத்துவ மனையில் சேர்ப்பித்தேன்.

39. கணேஷ் மோகன், மதுரை-7.
நோட்டுப் புத்தகம் வாங்க இயலாத ஓர் ஏழை மாணவனுக்கு அவை வாங்க ரூ. 11—50 கொடுத்து உதவினேன்.

40. மகேஷ் சிவமணி, நாகைப்பட்டினம்.
பொறுப்பற்றுத் திரிந்த பதினெட்டு வயது இளைஞனுக்கு ஒரு கடையில் வேலை வாங்கிக் கொடுத்தேன்.

41. ஐ. சுந்தரேசுவரன்,
திருநெல்வேலி டவுன்.
என் பிறந்த நாளன்று ஏழைகளுக்கு அன்ன தானம் செய்தேன்.

42. கே. எஸ். அனந்தநாராயணன்,
கோயமுத்தூர்.
வழி தெரியாது தவித்து நின்ற ஒரு குழந்தையை அதன் பெற்றோரிடம் சேர்ப்பித்தேன்.

43. ஆர். ஆனந்தி, ராய்பூர்.
எங்கள் வீட்டு மாடியில் இருக்கும் மூளை வளர்ச்சியில்லாத பெண்ணின் பைத்தியம் தெளிய இறைவனிடம் பிரார்த்தனை செலுத்தினேன்.

44. எஸ். குருசாமி, கோயமுத்தூர்.
இன்று காலை நானும் என் நண்பனும் கை உறைகளுடன் எங்கள் வட்டாரத்தில் ஐந்து தெருக்களில் உள்ள பார்த்தீனியம் விஷச் செடிகளைக் களைந்து குழி தோண்டிப் புதைத்தோம்.

45. இராம. குமாரசாமி, வேலூர்.
30.8.80 அன்று இரத்த தானம் செய்தேன்.

46. கே. முத்துசாமி, கூனூர்.
பிளஸ் டூ மாணவர்களுக்குப் பட்டப் படிப்புச் சம்பந்தமான விளக்கங்களைக் கூறி ஒத்தாசை செய்தேன்.

47. கே. ஏ. நடராஜன், சாக்கோட்டை.
ஆடிக் கிருத்திகையன்று தொழு நோய் ஆஸ்பத்திரியில் உள்ள 172 நோயாளிகளுக்கு வெண் பொங்கல் வழங்கினோம்.

48. வி. நாகராஜன், சர்ஷா.
எனது நண்பர் எலக்ட்ரீஷியன். சப்ளை லைனில் வேலை செய்து கொண்டிருந்தபோது ஷாக் அடிக்கும் வேளையில் நல்ல வேளையாக ஜெனரேட்டரை நிறுத்திப் பாதுகாத்தேன்.

49. பார்த்தசாரதி, திருப்பதி.
கண் தெரியாதவருக்குத் திருப்பதி பஸ் ஸ்டாண்டில் சாலையைக் கடக்க உதவினேன்.

50. ஆர். ஜி. கிருஷ்ணன், புதுதில்லி.
ஏழை நண்பனுக்குத் துணி மணிகள் இலவசமாக வழங்கி உதவினேன்.



# College Campus

## D.B. ஜெயின் கல்லூரி துறைப்பாக்கம்

தொகுப்பு: நாயகன்

## அந்தஸ்தை மீறிய காதல்!



'ஸ்.....அப்பாடா' என்று பெருமூச்சு விட்டபடி சதாசிவம் சோபாவில் வந்தமர்ந்து கொண்டார். சதாசிவம் ஒரு பெரிய 'பிஸினெஸ் மாக்னட்'. பல லட்சங்களுக்கு அதிபதி.

அவர் இப்போது வெயிட் பண்ணுவது ஒரு சாதாரண சிவராமனுக்காக. சிவராமன் எல்லோரும் போலக் காதலித்த பாவத்துக்காக மாட்டிக் கொண்டவன். எல்லோரும் போலத் தன் அந்தஸ்துக்கு ஏற்பக் காதலித்திருந்தால் பரவாயில்லை. அவன் காதலித்தது மேலே சொன்ன சதாசிவத்தின் மகள் வனிதாவை! அவனை வரச் சொல்லி அவனைப் பார்ப்பதற்காகத்தான் அவர் உட்கார்ந்திருந்தார்.

'டாமிட்! எப்ப வரப்போறானோ இவன்?' என்று எண்ணிக் கொண்டிருந்த அவர் சிந்தனையைக் கலைத்தது 'இன்டர்காம்' சத்தம்.

''யெஸ்...''

''யாரோ சிவராமனும்... உங்களைப் பார்க்க வேண்டுமாம்.''

''வரச் சொல்லு.''

மெல்ல, ஒரு கனத்த பையைத் தூக்கிக் கொண்டு சிவராமன் உள்ளே நுழைந்தான்.

''மன்னிக்கணும்... நான்....'' — அவன் மேலே தொடரு முன் அவர் கையமர்த்தினார்.

''வாய்யா, உட்கார்! உங்கிட்ட நிறையப் பேச வேண்டியிருக்கு.''

''சார்....''

''ஷட் அப்! என்ன ஒரு தைரியம் இருந்தா ஒரு பெண்ணை, அதுவும் என் பெண்ணை நீ லவ் பண்ணுவே! ம்!'' — கர்ஜித்தார் சதாசிவம்.

''.....சார்.... தயவு செய்து....''

''பேசாம இருய்யா. உங்களையெல்லாம் சும்மா விடக் கூடாது. போலீஸ்லே பிடிச்சுக் கொடுக்கணும்....''

''வந்து....''

''குறுக்கே பேசாதேய்யா. விழிச்சிடுவேன் விழிச்சு. கேக்கிறதுக்குப் பதில் சொல்லு! என்னய்யா பண்ணிக்கிட்டிருக்கே?''

''உட்கார்ந்திருக்கேன் சார்!''

''சட்! ஜோக் வேறே. என்னய்யா படிச்சிருக்கே?''

''பி.காம்....''

''படிப்பிலேயே இருக்கேய்யா Be Calmனு! இனிமே என் பெண்ணை எங்கேயாவது நோட்டமிடப் பார்த்தே: அவ்வளவுதான்.''

''சார்.... நீங்க.....''

''என்னைப் பத்தித் தெரியுமாய்யா, என் பணத்தைப் பத்தித் தெரியுமா? நானு தடவை மெட்ராஸைச் சாப்பிட்டு ஏப்பம் விடற அளவுக்குப் பணம் வச்சிருக்கிறவன். இப்ப என் சொத்து எவ்வளவு தெரியுமா? இன்னும் பத்துத் தலைமுறைக்கு உங்களாலே சம்பாதிச்சாக் கூட ஈடுகட்ட முடியாது.''

''சார்! நான் சொல்றதைக் கொஞ்சம் கேளுங்க......''

''போய்யா! உன்னைப் பார்க்கிற நேரத்திலேயே எனக்கு ரெண்டு லட்சம் பண நஷ்டம். நீ பேசறதை வேறே கேட்டுண்டு இருந்தா அவ்வளவுதான்.''

''சார்... ஐ ஆம்....''

''சட்! இதுக்கு முன்னாடி இவ்வளவு ரூபாய் பார்த்திருக்கியா நீ? இத பார் பத்து ரூபாயா ஐயாயிரம் ரூபாய். கணக்கிலே வராதது. கறுப்புப் பணம். எடுத்திண்டு போய் ஏதாவது பொழைக்கிற வழியைப் பாரு. கெட் அவுட்!'' — அவர் கத்தவும் மறுபடி 'இன்டர்காம்' ஒலித்தது.

''யெஸ்.''

''இன்னொரு சிவராமனும், உங்க பெண்ணுக்கு வேண்டியவராம், முக்கியமா உங்களைப் பார்க்கணுமாம், உள்ளே அனுப்பட்டா?''

''வாட்! அப்ப இந்த சிவராமன்?''

''சாரி சார். நான் வருமான வரி இலாகா சிவராமன். நான் போய் வரேன்!''

சதாசிவம் செயலற்றுப் போனார்!

எஸ். ராஜாராம்



# லிப்ட்!

"மூட்டிக்கப் போனாலும் முகராசி வேண்டும்." அடியேனுக்கு அது சிட்டிகை அளவு கூட இல்லை.

கல்லூரி நாடகம் முடிந்து சற்று லேட்டாகக் கிளம்பியதன் விளைவு பலரும் முன் பஸ்ஸில் போய்விட்டிருந்தனர். பல்லவனின் வருகைக்காக அரை மணி நேரத்துக்கும் மேலாகக் காத்துக் கொண்டிருக்கிறேன். என்னைப் போலவே ஒரு அதிருஷ்டம் கெட்ட பிறவி பக்கத்தில் நின்றிருந்தான். அவன் கடிகாரம் மணி பதினொன்றை நெருங்கியது. மதியம் பன்னிரண்டு மணிக்குச் சாப்பிட்டது. என் வயிறு அழ, கால் நகர மறுக்க, என் கை வேகமாகச் சென்ற கார் ஸ்கூட்டர் இவைகளை லிப்ட்டுக்காகக் கெஞ்சியது. ஒரு வண்டி கிறீச்சென்று என் அருகே நின்றது.

"அடையாறு போகணும்."

"ஓ! சாரி."

சரி. விட்டுவிட்டேன்.

பின் ஒரு கார் வந்தது. உள்ளே இருந்தவர்கள் என்னைக் கவனியாமல் சரசமாடிக் கொண்டிருந்தார்கள். பெட்ரூம் சீன். கடைசியில் எங்காவது மோதிக் கஷ்டப்பட வேண்டியது. இனி லிப்ட் கேட்டுப் பிரயோசனமில்லை என்று நடையைக் கட்ட கஷ்டப்பட்டுக் காலடி எடுத்து வைத்த நேரத்தில் மிதமான வேகத்தில் ஒரு மோட்டார் பைக் வர, கடைசியாக என் கை உயர, அவர் பிரேக்கைப் பற்ற நான் "அடையாறு" என்று கூறி அமர்ந்தேன். அமர்ந்த அடுத்த நொடியில் நான் இவ்வளவு நேரம் திட்டிய பஸ் என்னைத் தாண்டிச் சென்றது!

எப்போதோ வர வேண்டிய பஸ் அது! பங்க்சுவாலிட்டிக்கும் பல்லவனுக்கும் ரொம்ப தூரம். மெதுவாகப் பேச்சுக் கொடுத்துப் பார்த்தேன். பதிலுக்கு மனுஷன் வாயைக் கூடத் திறக்கக் காணும்.

பெட்ரோல் பங்கில் வண்டியை நிறுத்தி பெட்ரோல் நிரப்பிக் கொண்டார். பெட்ரோல் போட்ட பின் "சில்லறையா நாற்பது பைசா இருக்கா?" என்றார். பல்லவனுக்கான நாற்பது பைசாவை இந்தப் பாவிக்கு அழுதேன். எனக்கு நிசப்தம் பிடிக்கவில்லை. மறுபடியும் பேச்சுக் கொடுத்துப் பார்த்தேன். "பெட்ரோல் தட்டுப்பாடு பூதாகாரமாக உருவெடுக்கும் போலிருக்கே" —மனுஷனுக்குப் பேச்சுத் தட்டுப்பாடு போலிருக்கு. பதிலுக்கு இரண்டு வார்த்தை கூடக் காணோம்.

வண்டி மெதுவாக ஒரு பெட்டிக் கடையின் முன் நின்றது.

"ஒரு வில்ஸ் ஃபில்டர் வாங்கிண்டு வர்றீங்களா? — இஃப் யூ டோண்ட் மைண்ட்."

"நானே காசு கொடுத்தா?" என்றது உள் மனம். அவர் வாயில் சிகரெட் எரிந்தது. இங்கு என் வயிறு எரிந்தது.

"சார்! இத அப்படியே கிக் பண்ணிடுங்கோ!"

"அடப் பாவி! கிக் பண்ற சக்தி எனக்கு இல்லேடா" — கதறணும் போலிருந்தது. கிக் பண்ணைப் பண்ணைத் தூக்கித் தூக்கி அடித்தது. அவர் மேல் உள்ள கோபத்தில் எட்டி உதைக்கிறாற் போல் உதைத்தேன். வண்டி ஸ்டார்ட் ஆகியது. 'அப்பாடா' என்று ஆசுவாசப் பெருமூச்சு விட்டு முடிப்பதற்குள் வண்டி டட்டட்டட்டட்... நின்று விட்டது.

"எனி ப்ராப்ளம்?"

"கொஞ்ச நாளைக்கு முன்தான் ரிப்பேர் பண்ணியது" என்று அதை நோண்ட ஆரம்பித்தார்.

நோண்டிக் கொண்டே இருந்தார். அவர் கடிகாரம் நன்னிரவை உணர்த்தியது.

அவர் — அவரென்ன அவர் — பாழாய்ப் போன அவன் ஏறி உட்கார்ந்து கொண்டு என்னைத் தள்ளச் சொன்னான். குடல் வெளியே வந்து விடும்போலிருந்தது. மணி 12.10. நடந்து போயிருந்தாலே இத்தனை நேரம் சாப்பிட்டுத் தூங்கி இருக்கலாம்.

"ஒண்ணு பண்ணுவோம் சார்."

"என்ன சார்! சொல்லுங்க செஞ்சிடலாம்."

"வேகமாத் தள்ளிண்டே போயிடலாம். ப்ளீஸ் ஹெல்ப் மீ."

இதைத்தான் சொன்னேன் — முட்டிக்கப் போனாலும் முகராசி வேணும்னு. **— ஆவிசா**

---

**ராசி...,**

பரந்து இருக்கும் சாலைகள்,
பாலம் பாலமாய் பேனர்கள்,
ரதி சிரிக்க, பதி முறைக்க
சுற்றி தியேட்டர்களும், கட்டிடங்களும்
ஆனால்.. என் ராசி என்னவோ!
ஒரு நாளமர்ந்து ரசிக்க பஸ்ஸில்
சீட் கிடைக்காதா?

**— 'தி. குபரன்'**

"ஏன் சார் தீபாவளிக்கு என்ன வாங்கினீங்க?"

"கடன்"

X

**சத்தியம் தியேட்டரில் ஓர் உரையாடல்**

"சார் சத்தியமா படம் புடாதுங்க... ஒரே சோகம் படத்துல..."

" 'சாந்தமா' இருங்க, கடைசிலே படம் 'சுபத் துலே' முடியும்."

**— சா. ஸ்ரீ. அறிவழகன்**





கடைசி பக்கம்

# கண்ணாடியின் பின் பக்கம்



கண்ணதாசன்

மனித வர்க்கம் பரபரப்பான வாழ்க்கையை மேற்கொண்டு விட்டது. இதுவே கலியுகத்தின் முடிவு போலத் தோன்றுகிறது.

அடிப்படைப் பண்புகள், அடிப்படை நியாயங்கள் எல்லாம் தொட்டுக்கொள், துடைத்துக்கொள் என்றாகிவிட்டன. தாய்மை தன் பரிபூரண ஆதிக்கத்தையும் இழந்துவிட்டது. குழந்தைக்குக் தாய்ப்பால் கொடுப்பதே குறைந்து விட்டது. கற்பு, அடக்கம், இவையெல்லாம் இலக்கியங்களோடு நின்று விட்டன.

ஹோட்டல்களிலும், தெருக்களிலும் ஆண்களும் பெண்களும் இனந் தெரியாமல் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.

வாகனங்களின் புகை வானத்தை அசுத்தப் படுத்திக் கொண்டிருக்கிறது. வியாபாரத்தில் நாணயம் அடியோடு படுத்துப்போய் விட்டது.

பள்ளிகள், கல்லூரிகளில் ஒழுங்கீனம் வளர்ந்து விட்டது.

எல்லாமே போலித்தனம். மனித உடம்பில் பாதியும் போலி வேஷம்.

நான் நினைத்துப் பார்க்கிறேன்.
நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு...

நகரங்களும், கிராமங்களும் எவ்வளவு பரிசுத்தமாக இருந்தன. சென்னை நகரம் கூட எவ்வளவு அழகாகவும், அமைதியாகவும் காட்சியளித்தது. கிராமங்கள் எவ்வளவு நிம்மதியாக இருந்தன!

தேர் திருவிழா, திருமணம் எல்லாமே எவ்வளவு ஜாம் ஜாம் என்று நடந்தன!

பெரியவர்களுக்கு மரியாதை, கல்விக் கூடங்களில் பக்திப் பண்பாடுகள். காந்தி எப்போது ராமராஜ்யத்தை விரும்பினாரோ அப்போது கூடுமானவரை ராமராஜ்யமே நடந்து கொண்டிருந்தது. இப்போதோ?

என்னதான் வாழ்க்கை வசதிகள் பெருகட்டும், பழைய பண்பாட்டின் சுகம் வரவே வராது.

ஆயிரம் ஷவர்பாத்கள் கட்டினாலும் ஆற்றிலே குளிக்கும் சுகமாகுமா?

என்னதான் மின்சார விசிறி ஓடினாலும் வேப்ப மரத்துக் காற்றின் இனிமை வருமா?

போலித்தனமான நாகரிகத்தின் உச்ச கட்டமே கலியுகத்தின் முடிவாக இருந்தால் கூட யாரும் ஆச்சரியப்பட வேண்டியதில்லை.

நாகரிகத்தின் உச்சாணிக் கொப்பில் வாழ்ந்து பார்த்த அமெரிக்கர்கள் ஆன்மீகத்துக்குத் திரும்பிக் கொண்டிருக்கும் அதே நேரத்தில் ஆன்மீகத்தின் உச்சத்திலிருந்த இந்தியர்கள் 'போலி நாகரிகத்தைப் புகலிடமாகக் கொண்டு விட்டார்கள்.

கட்டுகின்ற வீடுகள் எல்லாம் காலால் உதைத்தால் பொல பொலவென்று உதிர்ந்து விழும்.

தலையை மொட்டை யடித்துக்கொண்டு வாழ்ந்த என் தாத்தாவை விட இன்றைய ஹிப்பித்தலையர்கள் ஆரோக்கியமாகவா இருக்கிறார்கள்?

ஒரு மாத்திரையும் பாராமல் கண்மாயில் குளித்துக் கரையில் உலாவிய என் தந்தையை விட. நான் ஆரோக்கியமாகவா இருக்கிறேன்?

வாழ்க்கையைச் சுலபமாக்குவதற்காக வந்த வசதிகள் அதைப் போலித்தனமாக்கி விட்டன.

பெண்ணுக்குப் பெண்மையும் போய், ஆடவனுக்கு ஆண்மையும் போய், வெள்ளம் போகிற வேகத்தில் எல்லோரும் போய்க் கொண்டிருக்கிறோம்.

'அத்தனையும் மோசமானவை' என்று நான் மொத்தமாக ஒதுக்கிவிட வில்லை. சில பயனுள்ள வசதிகளும் வந்திருக்கின்றன. அவை எண்ணிக்கையில் மிக மிகக் குறைவு.

நூற்றுக்குத் தொண்ணூறு சதவிகிதம் உலகம் அழிவை நோக்கியே போய்க்கொண்டிருக்கிறது.

எனது தலைமுறை முக்கால் தூரத்தைக் கடந்து விட்டது. நான் தப்பி விட்டேன்.

ஆனால் என் குழந்தைகள்...?

ஒரு இட்லி பத்து ரூபாய் விலையாவதை அவை பார்க்கப் போகின்றன. அச்சம், நாணம் இல்லாத உலகத்தில் அவை வாழப் போகின்றன.

தனி மனிதனின் சாப்பாட்டுச் செலவே மாதம் இரண்டாயிரம் ரூபாயை எட்டும் கோரத்தை அவை காணப் போகின்றன.

எல்லாமே தாறுமாறான ஒரு காட்டுமிராண்டிக் காலத்தை அவை எதிர்நோக்கி நிற்கின்றன.

என் பேரக் குழந்தைகள் அதிருஷ்டக்காரர்கள்; காட்டுமிராண்டிகளாகவே வாழ்ந்து பார்க்கிற வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கப்போகிறதல்லவா?

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# உகந்த எமல்ஷன் பெயிண்டைத் தேர்ந்தெடுத்துத் தீட்டுவீர்-தகுந்த முறையில் உங்கள் சுவர்களுக்குச் சோபை ஊட்டுவீர்!

## திறமான எமல்ஷன் பெயிண்டைத் தேர்ந்தெடுக்க உங்களுக்கு உதவுகிறது நெரோலாக் பெயிண்ட்ஸ்

நீங்கள் கொடுக்கும் பணத்திற்குக் கூடுதல் பலன்தர, பெயிண்டில் என்னென்ன சிறப்புகள் இருத்தல் வேண்டும்!

நிறையவே!



எனவே, அரும்பாடுபட்டு தேடிய பணத்தைக் கொண்டு, எமல்ஷன் பெயிண்ட் வாங்கும்போது, உங்கள் பணத்திற்குரிய நல்ல பலனைப் பெற, நீங்கள் எண்ணிப் பார்த்திடத் தக்க சில சிந்தனைகள் உண்டு.

1. ஸிலிகோன் அடங்கிய நெரோலாக் அக்ரிலிக் எமல்ஷன் போன்ற நல்ல எமல்ஷன் பெயிண்ட், பட்டுப் போன்ற மென்மையான மெருகு கொடுக்கிறது.



2. நீடித்துழைப்பதோடு நடைமுறையில் அதிகப் பரப்புக்கு வண்ணப்பூச்சு தருகிறது.

3. மிருதுவான, ஈரத் துணி கொண்டு முறையாகத் துடைத்துச் சுத்தப்படுத்தி பராமரித்தால் போதும், புதுமைப் பளபளப்பு நீடித்திருக்கும் எப்போதும்.

4. இதில் அடங்கிய சிறப்பான ஸிலிகோன், வண்ணம் நீடித்து நிலைத்து நிற்கவும், சுத்தம் செய்ய வாய்ப்பாகவும் அமைகிறது. அதாவது வண்ணங்கள் ஆண்டாண்டுகளாக மங்காமல் விளங்குகிறது.





எனவே ஆரம்பச் செலவை எண்ணி ஏமாந்துவிடாதீர்கள். ஸிலிகோன் அடங்கிய நெரோலாக் அக்ரிலிக்எமல்ஷன் பெயிண்ட்டே, அதிகபட்சம் சிக்கனமானது என்பதை காலகட்டத்தில் உணர்ந்து கொள்வீர்கள். இது எப்படி, ஏன் சாத்தியம் என்பதைப் பற்றிய விவரங்களை அறிய விரும்பினால், வண்ணம் பூசுவதைப் பற்றிய "All you wanted to know about painting", என்ற எங்களின் நெரோலாக் பெயிண்ட்ஸ் இலவச ஆங்கில வெளியீட்டுக்கு எழுதவும். கீழே தரப்பட்டுள்ள கூப்பனை நிரப்பி எங்களுக்கு அனுப்பினால் போதும்.




**நெரோலாக் பெயிண்ட்ஸ்**

இல்லங்களுக்கு எழிலூட்டும் வண்ணங்கள்!

தயவு செய்து நெரோலாக் பெயிண்ட்ஸ் விளக்கப் புத்தகம், ஆங்கிலப் பிரதி ஒன்று அனுப்பவும்.

பெயர் ..............................

முகவரி ..............................

.............................. பின் கோட் ..............

குட்லாஸ் நெரோலாக் பெயிண்ட்ஸ் லிமிடெட்
விற்பனைப் பிரிவு, தபால் பெட்டி எண் 16322
பம்பாய்-400 013

JLKA-GNP-165-TAM

165(V)